# தி.தி. தேவஸ்தானத்தாரின் அரும்பொருட் காட்சியகம்

இந்து சமயத்தின் பெருமையினையும், இந்திய மண்ணின் கலாசார அருமையினையும் பிறருக்கு எடுத்துக் காட்டி, அவை மேலும் சிறப்புறும் வகையில் நாளைய இந்தியனைச் சிந்திக்க வைக்கும் ஒரு வாய்ப்பாக, தி.தி.தே. மேற்கொணடு வரும் பல முயற்சிகளில் ஒன்றுகத் திகழ்வது தற்போது மேலாண்மையினால் அமைக்கப்பட்டிருக்கும் அருட்பொருட் காட்சியகங்கள். தற்போது திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பொருட்காட்சியகமானது 27-12-80 அன்று முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்களால் திறக்கப்பட்டது. இங்கு திருப்பதி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ள பழங்கால நினைவுச் சின்னங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வேலைப்பாடுகள், சிற்பங்கள், வைதீகச் சடங்கு முறைகள் யாவும் காட்சிக்கு வைக்கும் எண்ணத்தில் இக்காட்சியகம் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும், தி.தி. தேவஸ்தானத்தாரிடமும் மற்றைய இடங்களிலும் சேகரிக்கப்பட்ட மர வேலைப்பாடுகள், விக்ரகங்கள், உலோக உருவமைதிகள், இசைக்கருவிகள், போர்க்கருவிகள் இக்காட்சியத்தில் இடம் பெறச் செய்யும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. மறைந்த அறிஞர் திரு. வேட்டூரி பிரபாகர சாஸ்திரி அவர்கள் ஆந்திர நாட்டு பல ஜமீந்தார்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட பொருட்களும் இக்காட்சியகத்தை அலங்கரிக்கின்றன. மற்றொரு அரும்பொருட்காட்சியகம் (எஸ்.வி. கோயில்கலை களஞ்சியம்) வைணவ நெறிமுறைகளைச் சித்தரித்திடும் வகையில் திருப்பதியில் ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி வடக்கு மாடவீதியில் கச்சேரி நம்மாழ்வார் கோயிலுக்கருகே பெரியாழ்வார் மண்டபத்தில் அமைந்துள்ளது. இக்காட்சியத்தில் வைணவப் பிரிவின் ஆதியும், அதன் வளர்ச்சியும், சிற்பக்கலை, கோயிற்கலை, உருவமைதிகள், ஆழ்வார்கள், திவ்ய க்ஷேத்ரங்கள் மேலும் மற்றைய கலைகள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

**வைணவத்தின் ஆதியும் அதன் வளர்ச்சியும் :**

இப்பிரிவில் வைணவ மதத்தின் தொன்மை விளக்கப்பட்டுள்ளது. மகாவிஷ்ணு என்று வேதத்தாலும் ஸ்ரீமந் நாராயணன் என்று உபநிஷத்துக்களாலும் வணங்கப்பெற்று வளர்ந்த திருமால் வழிபாட்டு வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இத்திருமால் வழிபாடு இன்று நாடு முழுவதும் 200 வழி நிலைகளில் போற்றப்படுகின்றது. வைகானஸம், பஞ்சாராத்ரம் என்ற ஆகம முறைகளில் தென்னாட்டில் வழிபடப்பட்ட வைணவம் பற்றிய. வளர்ச்சி, அட்டவணை முறையில் விளக்கப் பட்டுள்ளது. தொன்மை மிக்க வைணவத்திருத்தலங்களில் காணப்பட்ட சித்திரங்களும், 15-வது நூற்றுண்டைச் சார்ந்த அரிய சிற்ப உருவமைதிகள் குறிப்பாக நாகலாபுரம் திருக்கோயிலில் கிடைக்கப்பெற்றவைகளும் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

கோயில் நிர்மாண விளக்கங்கள் : ஆகம மற்றும் சிற்ப இலக்கணப்படிக் கட்டப்பட வேண்டிய கோயில் அளவு முறைகள், கோயில் கட்டுவதற்கு இடம், தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய நியதிகள, முறைகள் ஆகியன படங்கள், மாதிரிகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

சிற்ப அளவு முறைகள் : ஆண், பெண் சிற்ப உருவமைதிகள் எந்த அளவு முறைகளில் இருந்திட வேண்டும் என்ற விளக்கங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

சிற்பங்கள் : விஷ்ணுவின் திருவுருவ அமைதிகள், எந்தெந்த உருவமைதிகளுக்கு எந்தெந்த வகையென ஆடை, ஆபரணங்கள் இருந்திடல் வேண்டும் என்பதை இப்பிரிவு தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

ஆழ்வார்கள் : தென்னாட்டில் வைணவம் தழைத்தோங்க வகை செய்த ஆழ்வார்கள் மற்றும் விசிஷ்டாத்துவைதக் கொளகையின் தந்தையான ஸ்ரீராமானுஜரின் வைணவத் தொண்டின் சிறப்பு இங்கு விளக்கப்படுகின்றது.

வைதீகச் சடங்குகள் : அஷ்டதஸ சம்ஸ்காரங்கள் இப்பிரிவில் விளக்கப்பட்டுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு இந்துவும் கடைப்பிடிக்க வேண்டிய வைதீக சடங்கு முறைகள் தெளிவுறுத்தப்படுகின்றன. கோயில் வழிபாட்டின் முக்கியத்துவம் இங்குச் சித்தரிக்கப்படுகின்றது. வைணவக் கோயில்களில் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள், வாகனங்களின் மாதிரிகளும் இங்குக் காட்சி அளிக்கின்றன.

108 திருத்தலங்கள் : 108 வைணவத் திருப்பதிகளில் உள்ள கோயில்களின் கட்டிடச் சிறப்பு, சிற்பச் சிறப்புக்கள் போனறவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் 108 கோயில்களின் புகைப்படங்கள் இங்கு இடம்பெற்றுள்ளன.

கலைகள் : இப்பிரிவில் திருமாலின் புகழ் பாடிய மெய்யடியார்களின் சிறப்பு தெரிவிக்கப் பட்டுள்ளது. நவீன காலம வரை சேகரிககப்பட்ட விஷ்ணு, சக்தி, ஷண்முகர் போன்ற பல்வேறு கடவுளரகளின் உருவமைதிகள இங்கு இடம்பெற்றுளளன. குண்ட்ரபாககத்தில் 3வது ராஜராஜன் கோயிலிலிருந்து எடுக்கப்பட்ட சேகரிப்புகள் இப்பகுதியின் வரலாற்றைச் சிறப்புறக்கூறும்.

அனுமதி நேரம்: காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை.

அனுமதிக் கட்டணம்: பெரியோர்: ரூ.1/- சிறுர்: 0-50.

பொறுப்பாளர்.



உண்டோ வைகாசி விசாகத்துக் கொப்பொருநாள்
உண்டோ சடகோபர்க் கொப்பொருவர் - உண்டோ
திருவாய்மொழிக்கொப்பு தென்குருகைக்குண்டோ
ஒருபார் தனிலொக்கு மூர்.

[வைகாசி மாதத்து விசாக நட்சத்திற்கு ஒப்பான தினம் உண்டோ! நம்மாழ்வாருக்கு ஒப்பானவர் மற்றொருவர் உண்டோ! அவரருளிய திருவாய்மொழிக்கு ஒப்பானப் பிரபந்தம்தான் உண்டோ! இவ்வுலகில் தெற்குத் திசையிலிருக்கும் ஆழ்வார் திருநகரிக்கு ஒப்பான ஊர்தான் உண்டோ! இல்லை என்றபடி.]

--உபதேசரத்தினமாலை -15




# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில் திருச்சானூர்.

## பத்மாவதி பரிணயம்
(கல்யாணோத்ஸவம்)



**தினசரி காலை 10-30 மணிமுதல் 12-00 மணி வரை**

* ரூ. 500/- கட்டணம் செலுத்தி இந்த ஆர்ஜித சேவையில் பங்கு கொள்ளும் குடும்பத்தினருக்கு ஆடை அன்பளிப்பும், ஐந்து நபர்களுக்கு இலவச தரிசனமும் கிடைக்கும்.
* பணத்தை நேரிடையாக திருக்கோயில் பேஷ்காருக்கு செலுத்தலாம் அல்லது திருமலை திருப்பதி தேவஸ்தான செயலாட்சித்தலைவர் பேருக்கு ஏதாவது தேசீயமயமாக்கப்பட்ட வங்கியிலிருந்து ரூ. 500க்கான D.D.யை பெற்று அனுப்பலாம்.

கண்ணிற்கு விருந்தளிக்கும் கல்யாணோத்ஸவத்தில் பங்குகொண்டு தாயாரின் திருவருளுக்கு பாத்திரமாகுங்கள்.

செயலாட்சித் தலைவர்.




*வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்*
*வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்*

மலர் 29 ஜூன் - 1998 இதழ் 1

| உள்ளுறை | பக்கம் |
|---|---|
| ஆழ்வார் காட்டிய நன்னெறி | 12 |
| எம்பெருமானாரை வியக்கவைத்த பெண்கள் | 14 |
| ஒரிசாவில் லக்ஷ்மி புராணம் | 16 |
| த்வய மந்திர மகிமை | 19 |
| நாலாயிரத்தில் நம்மாழ்வார் பழமொழிகள் | 22 |
| நறையூர் நின்ற நம்பி | 24 |
| பகவத் கீதை | 27 |
| வண்ணத்துப்பூச்சியை வதைக்காதே! | 29 |
| வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும் | 32 |
| ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரங்கள் | 35 |
| ஸ்ரீ ராமாநுஜர் | 39 |
| அருள்மிகு திருவேங்கடம் உடையான் திருக்கோயில்-அரியக்குடி | 45 |

இதழில் வெளியாகும் கட்டுரைகளுக்கும், கருத்துக்களுக்கும் அவ்வவ்வாசிரியப் பெருமக்களே பொறுப்பாவர் - ஆசிரியர்

**அட்டைப்பட விளக்கம்**

முன் அட்டை . ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி உத்ஸவ மூர்த்தி-திருப்பதி
பின் அட்டை . ஸ்ரீ பத்மாவதி தாயார் தெப்போத்ஸவம்-திருச்சானூர்

சிறப்பாசிரியர்
திரு. எம்.கே.ஆர். விநாயக், ஐ.ஏ.எஸ்
செயலாட்சித்தலைவர்,
தி.தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

❊ ❊ ❊

ஆசிரியர்
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

❊ ❊ ❊

துணை ஆசிரியர்
திரு. வ.கோ. சொக்கலிங்கம், எம்.ஏ.,

❊ ❊ ❊

அச்சிடுபவர் :
திரு. எம். லக்ஷ்மண் ராவ்,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

❊ ❊ ❊

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri" T.T.D., Tirupati.
Phone : 22294

❊ ❊ ❊

தனிப்பிரதி ரூ. 4/-
வருடச்சந்தா ரூ. 48/-

# உங்களுடன்....

வாழையடி வாழையாக வையகத்தில் வாழ்ந்துவரும் மானிடன் ஏதோ ஒன்றனுக்கு அடிமைப்பட்டு, அல்லலுற்று, அவதிப்பட்டே வருகின்றான். மேலும் அவன் அவ்வடிமைச் சங்கிலியிலிருந்து விடுபட வழிதெரியாமல் வாழ்நாள் முழுவதும் வேதனைப்படுகின்றான். இவ் உலகத்திற்கு நாம் எப்படி வந்தோம்? என்னச் செய்யப்போகிறோம்? எதைக் கொண்டு செல்லப்போகிறோம்? என்று ஒருவன் ஒருமணித்துளியாவது சிந்திப்பானேயானால் அவன் எவற்றினுக்கும் அடிமையாகத் தேவையில்லை. அப்பொழுது அவன் பற்றற்ற நிலையை அடைவது உறுதி.

பற்றற்ற நிலையா! அது எது? எச்செயலையும் எந்த உதவியையும் 'நான்' செய்கிறேன் 'என்னால்' செய்யப்பட்டது எனும் அகங்கார, மமகாரங்களை விட்டொழுந்து நான் எனக்கு உரியேன் அல்லேன் என்று இருந்து, ஆசைகளுக்கு அடிமையாகுவதை விடுத்து, ஆண்டவனுக்கு அடிமைப்பூண்டு ஒழுகுதலே பற்றற்ற நிலையாகும். இதுபற்றியே பொய்யாமொழிப்புலவரும் "பற்றில்லாதவனாகிய கடவுளுடைய பற்றை மட்டும் பற்றிக்கொள்ள வேண்டும், எதற்காக என்றால் நம்மிடம் உள்ள பற்றுக்களை விட்டொழிப்பதற்கே அப்பற்றைப் பற்றவேண்டும்" என்று அறிவுறுத்தியிருக்கிறார்.

மானிடனாகப் பிறந்தவன் சிறந்ததோர் வாழ்க்கை நெறியினைக் கடைபிடிக்க வேண்டியது கடமையல்லவா! கண்ணியம் தவறாமல் செயலாற்ற வேண்டியது மானிட லக்ஷணமல்லவா! கட்டுப்பாட்டோடு வாழ்வது மனித இலட்சியம் அல்லவா! இவற்றினுக்கெல்லாம் ஓர் நற்றீர்வு காண வேண்டுமாயின் நல்லதை நாடு அறியப் பறைச்சாற்றும் சமயச் செய்திகளை, விளக்கங்களை நாம் நாடுவது இன்றியமையாதது. இவற்றினை அறிந்து கொள்ள ஏற்றதோர் நற்சாதனம் சமய நூல்கள் அல்லவா! இத்தகு பெருமைமிகு சமய நூல்கள் கொண்டு விளக்கிடும் ஆன்மீக உயர் தத்துவக் கருத்துக்களை அறிவதற்கு வடமொழிப்புலமையும், உயரிய மன ஈடுபாடும் தேவை. ஆனால் நாளும் பிரச்சனைகளால் சூழப்பட்டு வரும் ஒரு சாதாரண இந்துக்கு அத்தகு பக்குவ நிலை அடைவது என்பது வாழ்நாளில் அவன் பெற வேண்டிய ஒரு பெரும் பேறாகவே அமையும். அதுபோது, தன் சமயத்தைப்பற்றி அறிந்து கொள்ளாமலேயே, அவை வழிகாட்டிடும் வழியில் நின்று மன அமைதி எனும் பெரும் வரத்தினை பெறாமலேயே ஏமாற்றங்களே தனது வாழ்க்கைப்பயனாக அடைந்து, இம்மண்ணிலிருந்து மறைந்துவிட வேண்டி இருக்கும். இதனை மனதிற்கொண்டுதான் இதிஹாஸ, காவிய, புராண சமயக் கருத்துக்களை பல சிற்றிலக்கியங்கள் மூலமாக, ஆழ்வார்கள், நாயன்மார்கள் பாசுரங்கள் மூலமாக நமக்கு அளித்து சென்றுள்ளனர் நமது சமயச் சான்றோர்கள். ஆனாலும் அவற்றை அறிந்து இன்புற முடியாத நிலையில் இம்மனிதன் இருந்திட்டபோது, அக்கருத்துக்களை எளிமையாக நேரிடையாக அவன்தன் தாய்மொழியில் அவனுக்கே விளக்கிட 'பத்திரிகைகள்' அவனுக்கு உதவிட்டன. அவற்றுள் மற்ற இதழ்களை விட, சமய இதழுக்கு ஒரு தனி ஏற்றம் எப்பொழுதும் உண்டு என்பது நாம் மறுக்கமுடியாத

உண்மையாகும். எங்ஙனமெனில்? லௌகிகமான இல்வாழ்க்கையின் சுவையினை எடுத்துக் கூறுமல், சிற்றின்ப வாழ்க்கையில் மேலும் மேலும் நம்மைத் தள்ளாமல், மீண்டும் மீண்டும் நமக்குப் பிறப்பினை நல்காமல், பேரின்ப வாழ்க்கைக்கு நம்மை அழைத்துச் செல்லும் பெருஞ்சாதனங்களாக - வழிகாட்டிகளாக விளங்குகின்றன சமய இதழ்கள்.

சமய உணர்வினை மக்களிடையே பரப்புவதில் பெருந்தூதராக சமய இதழ் பணி யாற்றுகிறது என்றால் அது வியப்பாகாது. துன்பங்களைத் தாங்கித் தாங்கி சோர்வுற்று காணப்படும் மனிதனுக்கு அருமருந்தாக சமய இதழ் செயல்படுகிறது. இன்னும் ஒருபடி மேலாக காலத்தின் சுழற்சியால் சுழன்று சுழன்று தள்ளாடித் திசைத் தெரியாமல் திரிபவனுக்கு சிறந்த வழிகாட்டியாகவும் சமய இதழ் செயல்படுகின்றனதெனில் அது வியப்பன்று.

இந்த வகையிலே சமய இதழ்கள் ஆற்றும் பணியினை அளவிடற்கரியது. இறைவனை தரிசிக்க நாம் திருக்கோயில்களுக்கு செல்ல வேண்டியுள்ளது. இறைவன் திருநாமங்களை யும், திருவிளையாடல்களையும் அறிய நாம் எங்கும் சென்று அலையத் தேவையில்லை. நாம் இருந்த இடத்திலேயே இருந்தவண்ணம் அறிந்துய்யும்படிக்கு பரந்தாமனின் புராண வரலாறுகள் தாங்கிய சமய இதழ்கள் நம்மை நாடிவந்து நம் இருகரங்களிலும் ஆன்மீக குழந்தையாகத் தவழ்கின்றன.

இவ்வகையிலே இந்து சமய நெறிகளை பரப்பும் சமய இதழ்களிலே ஒன்றாக தி.தி. தேவஸ்தானம் வெளியிட்டு வரும் சமய மாத இதழ் "ஸப்தகிரி" என்பதை நாம் அனை வரும் அறிவோம். இந்த 'ஸப்தகிரி' இதழ் பிறந்து 28 ஆண்டுகள் நிறைவுபெற்று 29-ஆம் ஆண்டிற்கு இவ் இதழ் மூலம் அடியெடுத்து வைக்கும் இத்தருணத்தில் இவ் இதழ் வீறுநடை போடுவதற்கு நாளும் நல்லதோர் ஊக்கத்தினையும், ஆக்கத்தினையும் முறையே அளித்துவரும் வாசகப்பெருமக்களுக்கும், கட்டுரை ஆசிரியப்பெருமக்களுக்கும் நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளோம்.

அதுவும் ஒருசில மாதங்களுக்கு முன்புவரை காலங்கடந்து 'ஸப்தகிரி' வெளிவந்து கொண்டிருந்த தருணத்து பலபோது வாசகர்கள் உரிமையுடன் எங்களைச் சாடினாலும், அதன்பின்னால் அவர்கள் இதழ்மீது வைத்திருந்த ஈடுபாட்டை எடுத்துக்கூறி எங்கள் பொறுப் பினை மறைமுகமாக சுட்டிக்காட்டிய அவர்கள்தம் பேரன்பினை நாங்கள் நினைத்துத்தான் பார்க்கின்றோம். இந்தப் பேராதரவே எங்களுக்குக் கிடைத்திட்ட ஒரு பேருக்கமாகும். இதுவே எங்கள் பணியினை மேலும் பொறுப்புடனும், சீருடனும் பணிபுரிந்திட, அதனால் 'ஸப்தகிரி' மேலும் ஒரு பயனுள்ள சமய சாதனமாக அமைந்திட வழிவகுத்துள்ளது. இதற்கு வாசகர்களுக்கும், விற்பனைப்பிரதிநிதிகளுக்கும், எழுத்தாளர் பெருமக்களுக்கும் மறுபடியும் எங்கள் நன்றியை தெரிவித்து 'ஸப்தகிரி' மேலும் சிறப்புற விளங்கி உங்களை மகிழ்விக்க, உங்கள் வாழ்த்துக்களை நாடி நிற்கின்றோம்.

***

# செய்திச் சுருக்கம்

## தி.தி. தேவஸ்தான வரவு செலவு திட்டம்

அண்மையில் ஐதராபாத்தில் தி.தி. தேவஸ்தானப் பொறுப் பாண்மைக்குழுக் கூடி 1998-99ஆம வருடத்திற்கான 295.56 கோடி ரூபாய் கொண்ட வரவு செலவு திட்டத்தை ஆமோ திததது. பொறுப்பாண்மைக்கு ழுத் தலைவர் திரு. கலிதிணடி ராமச்சந்திரராஜு அவர்களின் தலைமயில் இந்த பொறுப் பாண்மைக்குழு கூட்டப்பட்டது.

1997-98ம் வருடத்திற்கு முன்பு ஒதுக்கிய பட்ஜெட் ரூ. 253.63 கோடியை மேலும் 287.63 கோடி ரூபாயாக மதிப்பீடு செய்து ஆமோதிக்கபபட்டது. 1998-99ம் வருடத்திய மொத்தம வசூல் ரூ. 295.56 கோடி ரூபா யில் முதலீட்டு வசூல் 149.27 கோடியும், ஆர்ஜிதம், பிரசா தம், சிறப்பு தரிசனம், வாடகை வசூல் மொத்தம் சேர்ந்து 75.98 கோடியும், இதர வட்டி போன் றவை கூடுதலாக 70.31 கோடி ரூபாய் இருக்குமென மதிப் பீடு செய்யப்பட்டது. 1997-98ம் வருடததில் 287.52 கோடி ரூபாய்களுக்கு சரி செய் யப்பட்ட மதிபபீட்டில் முத லீட்டு வசூல் (ஹுண்டி, தங்க டாலரகள் மற்றும் நன்கொடை கள) 131.41 கோடியும், ஆர் ஜிதம, பிரசாதம, சிறப்பு தரி சனம, வாடகை போனறவற் றில ரூ. 65.37 கோடி, வடடி இதர வகையறுவின வருமா னம் 90.74 கோடி ரூபாய இருக் குமென மதிபபீடு செய்யப்பட் டது. செலவுககாக 1997-98ம் ஆண்டின வரவு செலவு திட்டத தில் ஒதுக்கீடு செய்யபபட்ட ரூ. 237.01 கோடிக்கு பதிலாக 216.68 கோடி ரூபாய்களாக மதிபபீடு மாற்றியமைக்கப்பட் டது. 1998-99ம் வருடத்திற் கான வரவு செலவு திட்டததில் கூடுதல் கட்டிடத்தொகுதி கட்டு வதற்கு ரூபாய மூன்று கோடி யும், கல்யாணோத்ஸவ மண்டபத் திற்காக இரண்டு கோடியும், பல் லாரெட்டி தோட்டத்தில் விருந் தினர் மாளிகை கட்டுவதற்கு ரூ. 1.25 கோடியும், கோகர் ணம் அருகில் விருந்தினர் மாளிகை கட்டுவதற்கு ரூபாய் மூனறு கோடியும், கூடுதல் கல யாண கட்டாவுக்காக இரண்டு கோடியும், ஊழியர்கள் ட்ரான் சிட் வசதிக்காக மூன்று கோடி யும், ஆகாயகங்கை அணைக் கட்டுக்காக ஐந்து கோடியும், திருவேங்கடவன அருங்காட்சி யகத்திற்கு இரண்டு கோடியும், குமாரதாரா, பசுபுதாரா, (உள் அலங்காரத்திற்கு) கபில தீர்த் தம் அணைககட்டுக்கு இரண்டு கோடியும் திருபபதிக்கு குடி நீர் திடடத்திற்கு (குழாய் வழி கள்) ரூ. 1.40 கோடியும், திருமலையில சத்திரத்திற்கு மூனறு கோடியும், திருபபதி யில முதல் சத்திரம் திருத்தி அமைபபதற்கு கோடியும், ஊழி யரகள வீடடுவசதிக்காக மூன்று கோடியும், இதர வீட்டு வசதிக் காக கோடி ரூபாயும், போக் குவரத்து மேம்படுத்த ஐநது கோடியும எஸ்.வி. கலைய ரங்கம ஒலி ஒளி அமைபபுக் காக, இருக்கை முதலிய ஏற்பா டுகளுக்காக இரண்டரை கோடி யும், மொத்தம் 40.15 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டது. நகை கள் செய்வேலையில் திரு. பத் மாவதி அம்மையாருக்கு ஜெம் செட் கிரீடத்திற்காக ரூபாய் 50 இலட்சம், திருமலையிலும் மற்ற கோவில்களில் உள்ள வாகனங்களை பழுது பார்ப்ப தற்காக ரூபாய் ஒரு கோடியும் ஒதுக்கப்பட்டது.

இந்த கூட்டத்திற்கு பொறுப் பாண்மைக்குழு உறுப்பினர்கள் திரு. டி. ஸ்ரீநிவாசலு, திரு. பி. நரசிம்மலு, திருமதி. எர் னேனி சீதாதேவி, திருமதி. சீதா ராமம்மா, திரு. ராதாகிருஷ் ணராஜு, திரு. மகதேவநா யுடு, திரு. எம். ராஜமோகன ரெட்டி, செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். வினாயக், துணைச் செயலாட்சித்தலைவர் திரு. ராமகிருஷ்ண மற்றும் பல உயர் அலுவலர்கள் கலந்து கொண்டனர்.

## கோதண்டராமர் திருக்கல்யாணம்

அண்மையில் திருப்பதி, ஸ்ரீகோதண்டராமர் திருக்கோயி லில் சீதாராமர் திருக் கல்யாணம் பக்தர்களிடையே கோலாகலமாக கொண்டாடப் பட்டது. வைரக்கிரீடம் பட் டாடைகளுடன் அலங்கரிக்கப் பட்டு கண்கள் கூசும்படியாக இருந்தது. அமைதியான சூழ் நிலையில் பக்தர்கள் உதவியு டன், திருமலையிலிருந்து வர



வழைக்கப்பட்ட சிறப்பு புரோகிதர்கள், கோயில்அர்ச்சகர்கள், வேத பண்டிதர்களின் மந்திர முழக்கத்துடன் சீதாராமர் திருக்கல்யாணம் வைபவமாக நடந்தது. இதை முன்னிட்டு மின் அலங்காரங்கள் செய்யப்பட்டது. திருக்கல்யாணத்தில் 'முத்துக்குளியல்' என்ற சடங்கு மிகவும் நேர்த்தியாக கோயில் மரியாதையுடன் செய்யப்பட்டது. குடும்பத் தம்பதிகள் ஆர்ஜித சேவையில் கலந்துக்கொள்ள வாய்ப்பு அளிக்கப்பட்டது. ரூ. 250/- கட்டணம் செலுத்தி இக்கல்யாணத்தில் 300க்கும் மேற்பட்டவர்கள் கலந்து கொண்டனர். திருமணத்திற்கு பிறகு மேலாடை, லட்டுகள், அப்பங்கள், அட்சதைகள் தம்பதிகளுக்கு தலைமை அர்ச்சகர்கள் அளித்து வேத கோஷங்களுடன் ஆசீர்வதிக்கப்பட்டனர். திருக்கல்யாணத்தில் பாதுகாப்பு ஏற்பாடுகள் பாதுகாப்பு அலுவலர் நாராயணசாமி தலைமையில் செய்யப்பட்டது. கோதண்டராமரை நான்கு மாடவீதியில் திருவீதி வலமாக கொண்டுவந்தனர்.

இந்நிகழ்ச்சியில் செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே. ஆர். வினாயக, திருமலை இணைச்செயலாட்சித் தலைவர பாலசுப்பிரமணியம், திருப்பதி இணைச்செயலாட்சித் தலைவர் திரு. இராமகிருஷ்ணு, துணைச் செயலாட்சி தலைவர் திரு. லக்ஷ்மீபதி, வனத்துறைத் தலைவர் திரு. வெங்கட்ராமய்யா, கிருஷ்ணகுமார, வரப்பிரசாத மற்றும் பல உயர் அலுவலர்கள் கலந்து கொண்டனர்.



நாக்லாபுரம் ஸ்ரீ வேதநாராயணசுவாமி திருக்கோயிலில் நடைபெற்ற சூர்ய பூஜை விழாவின்போது

## ஸ்ரீராமராய் உலாவந்த திருவேங்கடவன்

ஸ்ரீராமநவமியை முன்னிட்டு திருமலையில் குடிகொண்டிருக்கும் திருவேங்கடவன் திருக்கோயிலில் சிறப்பு நிகழ்ச்சிகள் நடந்தது. 5-4-98 அன்று 8-30 மணியளவில் ஸ்ரீராமர் வடிவத்தில் அனுமன் வாகனத்தில் திருமலை நான்குமாட வீதியில் திருவீதி உலா வந்தார் திருவேங்கடவன். இது போது இணைச் செயலாட்சித்தலைவர் திரு. பாலசுப்பிரமணியம், துணைச் செயலர்ட்சித் தலைவர் திரு. எம். ஸ்ரீநிவாசுலு, கூடுதல் பாதுகாப்பு அலுவலர் டாக்டர். ஜனார்த்தன நாயுடு எ.வி.எஸ்.ஓ. இரவிசங்கர் கலந்துகொண்டனர்.

## புதிய இயக்குனராக டாக்டர். ஜெகதீஷ்

திருமலை திருப்பதி தேவஸ்தான மேலாண்மையின்கீழ் இயங்கிவரும், ஸ்ரீபாலாஜி ஊனமுற்றோர் அறுவை மற்றும் பரிசோதனை மையம் இயக்குனராக டாக்டர். ஜெகதீஷ் அவர்களை நியமிக்க அரசு ஆணை பிறப்பிக்கப்பட்டது. இந்த மையத்திற்கு தற்போது துணை இயக்குனராக பணிபுரியும் டாக்டர். ஜெகதீஷ் அவர்களின் சிறப்பு பணியை கண்டு அவருக்கு பதவி உயர்வு தரும்படி தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழுவின் பரிந்துரை மீது இவருக்கு அப்பதவி அளிக்கப்பட்டது. அரசு ஆணை வந்தவுடனே டாக்டர். ஜெகதீஷ் அவர்கள் செயலாட்சித் தலைவரை சந்தித்து இயக்குனராக பொறுப்பேற்றார்.

1985ஆம் ஆண்டு ஏப்ரல் ஆறும் தேதி தி.தி. தேவஸ்தானம் சார்பில் ஏற்பாடு செய்யப்பட்டு இம்மையம் 13ஆம் ஆண்டுவிழா நடைபெறும் இத்தருணத்தில் இந்த நியமனம நடந்தது ஓர் விசேஷம். டாக்டர். ஜெகதீஷ் அவர்கள் இந்த



ஏப்ரல் 9, 10, 11ஆம் தேதிகளில் திருமலையில் நடைபெற்ற வசந்தோத்ஸவத் திருவிழாவின் போது



ஏப்ரல் 14 தமிழ் புத்தாண்டின்போது நடைபெற்ற படிவிழா

சந்தர்ப்பததில் பத்திரிக்கை நிருபர்களிடம் இதை தோற்றுவித்த வியாக்நேஷ்வரின் கொள்கைக்கு ஏற்றவாறு இயக்கததை விரிவுபடுத்தி சேவை செயவதாக வாக்குறுதி அளித்தார். போலியோ, ஊனம் உள்ளவர் நல்வாழ்வுக்காக அவர்களுக்கு அறுவை சிகிச்சை செய்து இயக்கத்தின் தொண்டினை நாடுமுழுவதும் விரிவடையச் செய்வோம் எனக் கூறினார்.

போலியோ முகாம்களை இம்மையம் சார்பில் விரிவு படுத்துவோம் என்றார். மருத்துவ வசதி கிடைக்காமல் அவதிப்படுபவரகளுக்கு மறுவாழவு அளிககும இயக்கமாக விரிவுப்படுத்தப் படும் என்றார். என் காலத்தில் 150 படுக்கைகள் கொண்ட இந்த மருத்துவமனையை 215 படுக்கைகள் கொண்டதாக மாற்றியமைத்ததுமட்டுமின்றி 100 படுக்கைகளுக்கு ஏற்பாடு செய்யப்படும் என்றார். இம்மையம் உலகிலேயே முதன்மை இயக்கமாக மாற்றவேண்டுமென்பதே என் கோரிக்கை இலட்சியம ஆகையால் உதவியாளர்கள நல்லோர்களின் உதவி என்றும் எங்களுக்கு தேவை என்றார் டாக்டர். ஜெகதீஷ் அவர்கள்.

## திருமலையில் சபாநாயகர்

அண்மையில் மக்களவை சபாநாயகர் திரு. பாலயோகி அவர்கள் திருமலைக்கு வேங்கடவனை தரிசிப்பதற்கு வந்திருந்தார். அவரை பத்மாவதி விருந்தினர் விடுதியில் இணைச் செயலாட்சித்தலைவர் திரு. பாலசுப்ரமணியம், ரிசப்ஷன் துணைச் செயலாட்சித்தலைவர் திரு. முனிசாமி, ஓ.எஸ்.டி. ராகவய்யா, ஆர்.டி.வோ. வேங்கடேஷ்வரலு வரவேற்றனர். பிறகு மாநில அமைச்சர் மெட்ல. சத்தியநாராயணுவுடன் கலந்து இறைவனை வழிபட திருக்கோயிலுக்கு வந்த போது அங்கு இணைச் செயலாட்சித்தலைவருடன் கோயில் துணை செயலாட்சித்தலைவர் திரு. ஸ்ரீனிவாசுலுவும் மற்றவர்களும் வரவேற்றனர். பிறகு இரங்கநாயகி மண்டபத்தில் வேதபண்டிதர்களால் ஆசிர்வாதம் பெற்றுக்கொண்டார். இணைச் செயலாட்சித்தலைவர் பிரசாதம் வழங்கி கௌரவித்தார்.

## "ஸ்ரீபாதுகா சஹஸ்ரம்" ஒலிநாடா வெளியீடு

அண்மையில் தி.தி. தேவஸ்தான ஒலிப்பதிவுத் திட்டத்துறையினரால் பதிவு செய்யப் பட்ட பத்து ஒலிநாடாக்கள் கொண்ட "ஸ்ரீபாதுகா சஹஸ்ரம்" என்ற ஒலிநாடாவை செயலாட்சித்தலைவர் திரு. எம்.கே. ஆர். வினாயக் அவர்கள் வெளியிட்டார்.

வேங்கடவன் சந்நதியில் ஆஸ்தான நிகழ்ச்சி நடந்த பிறகு ரங்கநாயகி மண்டபத்தில் ஒலிநாடாக்கள் வெளியிடப்பட்டது. இதில் பிரம்ம சூத்திரங்கள், உபநிஷத்துக்கள், பகவத்கீதையின் சாரம் போன்றவை அடங்கியுள்ள மொத்தம் 1008 சுலோகங்கள் உள்ளன. இறைவனின் மணி அம்சமாகிய வேதாந்த தேசிகனின் நூல் என்று கூறப்படும். அரங்கநாதனின் பாதங்களை பற்றிய இப் பாடல்கள் அரங்கநாயகர் மண்டபத்தில் வெளியிடப்பட்டது குறிப்பிடத்தக்கது. இந்த சுலோகங்களை திரு. இராதா பத்மநாபன் பாடினார். இந்த வெளியீட்டு நிகழ்ச்சியில் ஸ்ரீவேங்கடேசுவரா ஒலிப்பதிவு திட்டத் துறை இயக்குனர் திரு. காமிசெட்டி ஸ்ரீநிவாசுலு, திருமலை இணைச் செயலாட்சித் தலைவர் திரு. பாலசுப்ரமணியம், துணைச் செயலாட்சித்தலைவர் எம். ஸ்ரீனிவாசுலு, பேஷ்கார் இரங்கநாதாச்சாரி மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

## பதவி ஏற்பு விழா

அண்மையில் தி.தி. தேவஸ்தானப் பொறுப்பாண்மைக் குழுவின் உறுப்பினராக (அலுவல்சாரா) ஆந்திர மாநில அறநிலையத்துறை ஆணையர் திரு. எஸ்.எம். சத்யநாராயணு அவர்களுக்கு செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்கள் பதவிப்பிரமாணம் செய்து வைத்தார். இந்நிகழ்ச்சியில் இணைச்செயலாட்சித் தலைவர் திரு. பாலசுப்ரமண்யம், துணைச்செயலாட்சித் தலைவர் (வரவேற்பு -I) திரு. முனசுவாமி, சிறப்பு பணிஅலுவலர் திரு. ராகவய்யா, கோயில் துணைச்செயலாட்சித் தலைவர் திரு. எம். ஸ்ரீனிவாசுலு, கோயில் பேஸ்கார் திரு. ரங்கநாதாசார்யலு மற்றும் தி.தி. தேவஸ்தான உயர் அலுவலர்களும் கலந்து கொண்டனர்.

# கோயில் அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்களின் நலவாழ்விற்காக

## நன்கொடை விண்ணப்பம்

கோயில்கள் மக்களுக்கு ஆன்மீக இன்பத்தினை தந்திடுவது மட்டுமன்றி இந்தியக் கலாசாரத்தின், சனாதன தர்மத்தின் பெருமையை விளக்கிடும் வெற்றிச்சின்னங்களாக காலம் காலமாக விளங்கிவருகின்றன.

அர்ச்சகர்களுக்கும் மற்ற ஊழியர்களுக்கும் போதுமான ஊதியம் அளிக்க இயலாமல் போதிய வருவாயும் இல்லாத 20,000க்கும் மேற்பட்ட கோயில்கள் ஆந்திர மாநிலத்தில் உள்ளதென்பது மறைக்க முடியாத செய்தியாகும். பெரும்பாலான கோயில்களில் அர்ச்சகர்களுக்கு அளிக்கும் ஊதியம் கோயிலில் வருகின்ற அற்ப வருவாயின் மீது ஆதாரப்பட்டுள்ளமை வருந்தத்தக்க செய்தியாகும். இதனால் அர்ச்சகர்களும் மற்ற ஊழியர்களும் வறுமையின் காரணமாக அவர்களுடைய பிள்ளைகளுக்குத் தகுந்த அடிப்படைக் கல்வியினைக்கூட அளிக்கமுடியாமல் செலவுகளைத் தாங்கிக் கொண்டு ஏழ்மையில் வாழ்கின்றனர்.

இந்திய உச்சநீதிமன்றத்தின் அறிவுரைப்படி ஆந்திர மாநில அரசு ஒரு குறிப்பிட்ட தொகையினை அதாவது ரூ. 75 கோடி கூட்டுநிதியாக தற்காலிகமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்றும், அத்தொகையினை உயர்ந்த நிலையில் உள்ள கோயில்களிலிருந்தும், மற்றும் அனுமதிக்கப்படும் மற்றைய வழிகளின் மூலமும் பெற்று ஒரு நலவாழ்வு திட்டத்தின் கீழ் இத்தொகையினை அறநிலையத்துறையின் மேற்பார்வையின் கீழ் செயல்படும் கோயில்களில் பணிபுரியும் அர்ச்சகர்கள் மற்றும் இதர ஊழியர்களின் நலனுக்காகப் பயன்படுத்த வேண்டும் என்றும் ஆணை பிறப்பித்துள்ளது.

இத்திட்டத்தின்கீழ் கோயிலில் பணிபுரியும் அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்களின் குடும்பங்களுக்குத் தகுந்த வீடு, கல்வி மற்றும் ஆகம கல்வி போன்றவையும், மருத்துவ வசதியும், அவர்களுடைய பிள்ளைகளுக்குக் கல்வி வசதியும், அவர்கள் சொந்த வீடு கட்டிக்கொள்ள கடனுதவியும், கூட்டு காப்பீட்டுத்திட்டமும், எதிர்பாராத விபத்திற்கும், இறப்பு முதலானவைக்கும், விதவைகளுக்கு மறுவாழ்வு, காப்பகங்கள் அல்லது அவர்களுக்கு தேவையான பொருளுதவியும், படித்த வேலையில்லாத இளைஞர்களுக்கு பொருளுதவியும் அளிக்க இந்த நலவாழ்வு திட்டம் அமுலுக்கு கொண்டு வரப்படுகிறது. ஆந்திர மாநில அரசாங்கத்தின் விதிமுறைகளின்படி அவ் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின் கீழும் மேற்பார்வையிலும் இந்த நிதிதிட்டம் செயல்பட இந்திய உச்ச நீதிமன்றத்தால் அங்கீகரிக்கப்பட்டு இந்திய குடியரசு தலைவர் அவர்களால் 1-6-97-இல் இத்திட்டம் துவக்கி வைக்கப்பட்டது.

இது தொடர்பாக ஆந்திரமாநில அரசு வெளிநாட்டில் மற்றும் இந்தியாவில் உள்ள பல்வேறு நிறுவனங்களிடமிருந்தும் நன்கொடை கோரியுள்ளது. இவற்றிற்கு வருமானவரி விலக்கு கோரி வருமான வரித்துறை மற்றும் இந்திய அரசிடம் மாநில அரசு விண்ணப்பித்துள்ளது.

ஆகையால் அனைத்து அமைப்புகள், நிறுவனங்கள் மற்றும் இரக்க குணமுடைய பொதுமக்கள் அனைவரும் நன்கொடையாக தாராளமாக பொருள் தந்து உதவிடுமாறு ஆந்திர மாநில அரசு கேட்டுக்கொள்கின்றது. நன்கொடை அனுப்புவோர் தொகையினை கேட்பு காசோலையாகவோ அல்லது காசோலையாகவோ "அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்கள் நலவாழ்வு திட்ட நன்கொடை" என்று குறிப்பிட்டு "The Commissioner, Endowment Dept., Govt. of Andhra Pradesh, Hyderabad" எனும் பெயருக்கு எடுத்து அனுப்பவும்.

# திருமலை திருப்பதி தேவஸ்தானம்



## நூல் வெளியீட்டுத்துறை

### தமிழ் மொழியில் வெளிவந்துள்ளவை

| வரிசை எண். | நூலின் பெயர் | விலை ரூ. |
|---|---|---|
| 1. | ஸர்வதேவதா பூஜாவிதானம் | 5-00 |
| 2. | ஆத்ம போதம் | 29-00 |
| 3. | மஹாபாரதக் கதைகள் | 7-00 |
| 4. | முக்கவிகண்ட காவியம் பகுதி-II | 20-00 |
| 5. | சித்திரத் திருப்பாவை | 15-00 |
| 6. | பகவத் ஸந்தேஷம் | 0-50 |
| 7. | திருவேங்கட ஸ்தல புராணம் | 13-00 |
| 8. | நியாய ஸித்தாஞ்சனம் | 9-00 |
| 9. | அன்னமய்யா சங்கீர்த்தன மஞ்சரி | 10-00 |
| 10. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 8-00 |
| 11. | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 10-00 |
| 12. | திருவேங்கடமலை வரலாற்றுமாலை | 30-00 |

### ஆங்கில மொழியில் வெளிவந்துள்ளவை

| | | |
|---|---|---|
| 1. | அட்மினிஸ்ட்ரேஷன் ஆப் டெம்பிள்ஸ் | 25-00 |
| 2. | எ சினாப்ஸிஸ் ஆப் ஸ்ரீமத் பாகவதம் | 7-00 |
| 3. | பக்த புரந்தரதாஸா | 1-25 |
| 4. | ஹோலி ட்ரினிடி | 1-00 |
| 5. | பிரஸன்ன வெங்கடதாஸா | 1-50 |
| 6.** | சத்குரு தியாக பிரஹ்மம புஷ்பாஞ்சலி | 250-00 |
| 7.** | 108 வைஷ்ணவேட் திவ்ய தேஸம்ஸ் தொகுதி-III | 60-00 |
| 8.** | 108 வைஷ்ணவேட் திவ்ய தேஸம்ஸ் தொகுதி-IV | 60-00 |
| 9. | ஊர்தவமூலா | 12-00 |
| 10. | வ்யாஸராயலு | 0-75 |
| 11. | விசிஷ்டாத்துவைதா | 10-25 |
| 12. | விஷன் ஆப் ஆரியன் குலோரி | 1-50 |
| 13. | நம்மாழ்வார் | 3-00 |
| 14. | திருமழிசையாழ்வார் | 5-00 |
| 15. | பத்மாவதி அம்மவாரி டெம்பிள் | 2-00 |
| 16. | வைஷ்ணவ ஸம்ப்ரதாயம் இன் திருமலா | 1-25 |
| 17. | ஸ்ரீமத் பகவத் கீதா | 20-00 |
| 18. | க்ருஹ வைத்தியம் | 6-00 |
| 19. | ஹிஸ்டரி ஆப் திருப்பதி தொகுதி-I | 37-00 |
| 20. | ஹிஸ்டரி ஆப் திருப்பதி தொகுதி-II | 30-00 |
| 21. | ஹிஸ்டரி ஆப் திருப்பதி தொகுதி-III | 10-00 |
| 22. | திருமலை-திருப்பதி-திருச்சானூர் | 8-00 |

### வட மொழியில் வெளிவந்துள்ளவை

| | | |
|---|---|---|
| 1. | அலங்கார சங்க்ரஹா | 16-00 |
| 2. | ப்ரஹ்மம சூத்ர பாஷ்யம் | 30-00 |
| 3. | பாகவத மஹா புராணம் தொகுதி-I | 75-00 |
| 4. | கீதிகா நக்ஷத்ர மாலிகா | 2-50 |
| 5. | கோபால ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | 5-00 |
| 6. | கடோபநிஷத் | 15-00 |
| 7. | கபிலீஸ்வர ஸுப்ரபாதம் | 0-10 |
| 8. | லலிதா ஸஹஸ்ரநாமம் | 28-00 |
| 9. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18-00 |
| 10. | சீதாராமஞ்சநேயம் | 50-00 |
| 11. | தத்வ ஸங்க்யானம் | 2-00 |
| 12. | க்ரிஹ்ய சூத்ரஹ தொகுதி-I | 49-00 |
| 13.* | க்ரிஹ்ய சூத்ரஹ தொகுதி-II (இரண்டு தொகுதியும் சேர்ந்து) | 45-00 |

குறிப்பு : தி.தி. தேவஸ்தானப் பதிப்பகத்தில் வெளிவந்துள்ள நூல்களை மொத்தமாகக் கொள்முதல் செய்பவர்களுக்கு கீழ்க்கண்டவாறு வாணிபக் கழிவு அளிக்கப்படும்.

1. ரூ. 100லிருந்து 500 வரை வாங்குவோருக்கு 15% கழிவுத் தரப்படும்.
2. ரூ. 501லிருந்து 999 வரை வாங்குவோருக்கு 25% கழிவுத் தரப்படும்.
3. ரூ. 1000லிருந்து அதற்குமேல் வாஙகுவோருக்கு 30% கழிவுத் தரப்படும்.

தயவு செய்து நீங்கள் விரும்பும் நூலின் விலை மற்றும் தபால் செலவோடு கேட்பு காசோலையாக "The P.R.O., Sales Wing of Publications, T.T. Devasthanams, Tirupati" எனும் பெயருக்கு எடுத்து இம்முகவரிக்கு அனுப்பவும்.

* அச்சில் ** கழிவு இல்லை.

# ஆழ்வார் காட்டிய நன்னெறி

திரு. ஆர். நரஸிம்மன் - திருச்சி.

“அரிது, அரிது மானிடராய்ப் பிறத்தல அரிது”, என்பது மூதுரை. கிடைத்தற்கரிதான இந்த மானுடப்பிறவியைப் பயனுள்ளதாகச செய்து கொள்ளுவது அறிவுடமை. ஸ்ரீஆதிசங்கரரும, “துர்லம் மனுஷ்யத்வம், முமுக்ஷுத்வம், மஹாபுருஷஸம்சரயம்” என்று தமது விவேக சூடாமணியில் அருளிச்செய்துள்ளார்.

“அதய மே ஸபலம ஜன்ம ஜீவிதம்ச சுஜீவிதம்”, எனறு இதிஹாஸங்களிலும் கூறப்படுகிறது. வாழ்க்கையைப் பயனுளளதாகச் செய்து கொள்ளுவது எவ்வாறு என்று தெரிந்து கொள்ளவேண்டுமெ. ஜீவாத்மாவாகிற தன்னையும், அடையவேண்டிய பரமாத்மஸ்வரூபத்தையும், அவனை அடையவிடாமல் தடைசெய்கின்ற விரோதியாகிற நமது பாபவினைகளையும், அவனை அடைவிக்கும் வழி (உபாயம்)யினையும், அந்த பரமாத்மாவை அடைவதினாலேற்படும் பலனையும், ஆக அர்த்த பஞ்சகங்களையும் அறிந்துகொள்வது மிக மிக அவசியமாகும்.

இதேபோன்று தத்வத்ரயமென்று அழைக்கப்படும் தத்வம், ஹிதம், புருஷார்த்தங்களையும் உள்ளபடி ஒரு ஆசாரயன் மூலமாகத் தெரிந்துகொள்ளவேண்டும். சேதனன், அசேதனம், ஈஸ்வரன் என்கிற மூவகையான தத்துவங்களையும், சேதனாசேதனங்களிலின்றும் வேறுபட்ட மேலான ஈஸவரனை அடைய ஸாதனங்களான பகதி அல்லது ப்ரபததி என்கிற உபாயத்தையும, பலஸ்வரூபமான மோக்ஷ ஸாம்ராஜயமெனன், கைங்கர்யமெனன, இவறறை தெரிந்துகொணடாலே போதும். வாழ்கதை முறையைச சரியாகத திருததி, ஒரு உயரந்த ஆசாரயன மூலம எம்பெருமானிடம் சரணகதி பண்ணி, வாழ்க்கையை பயனுள்ளதாகச செயது கொள்ளலாம்.



ஸதாசார்ய கடாக்ஷததாலே, தன் ஸ்வரூபத்தை அறிநது, இதர விஷயங்களிலே மண்டிக கிடககும் ஆசைகளைத துறந்து, கரண களேபரங்களை ஸ்ரீஎமபெருமானிடததில கைங்கரயம செய்யும் முகமாகத திருப்பினால், இவ்வுலகிலேயே மோக்ஷானந்தததை அநுபவிககலாம். ஸ்வாமி ஸ்ரீதேசிகனும,

“நிரந்தரம் நிர்விசதஸ்த்வதீயம்
அஸ்ப்ருஷ்ட சிந்தாபதம் ஆபிரூப்யம் ।
ஸத்யம் ஸபே வாரணசைலநாத!
வைகுண்ட வாஸேபி நமே அபிலாஷ: ||”

“த்வம் சேத் ப்ரஸீதஸி, தவாஸ்மி ஸமீபதசசேத்
த்வய்யஸ்தி பக்திரநகா கரிசைல நாத ।
ஸம்ஸ்ருஜ்யதே யதிச தாஸஜனஸ்த்வதீய:
ஸம்ஸார ஏஷ பகவந் அபவர்க ஏவ ||”

என்று அருளியுள்ளார்.

நம்முடைய பூர்வாசார்யர்களும், ஸ்ரீஆழ்வாராதிகளும் இதனையே வலியுறுத்தியுளளனர். ஸ்ரீதொண்டரடிப் பொடி ஆழ்வாரும், “இந்திர லோகமாளும் அசசுவைபெறினும் வேண்டேன் அரங்கமாநகருளானே” என்று பகவதநுப ப்ரபாவத்தைக் குறிப்பிடுகிறுர்.

எல்லாவற்றிற்கும் மேலாக மாறன் சடகோபன் என்றழைக்கப்படும் ஸ்ரீநம்மாழ்வார், ஸ்ரீதிருவேங்கடமுடையானை மங்களாசாஸனம் பண்ணும் முகமாக காட்டிய நன்னெறி மிகச் சிறந்ததாகும்.

திருவாய்மொழி 3ம் பதது 3ம் திருவாய்மொழியில், நாம் செய்யவேணடியவற்றை உபதேசிக்கிறுர்:

"ஒழிவில் காலமெல்லாம்
உடனாய்மன்னி
வழுவிலா அடிமை செய்ய
வேண்டும் நாம்
தெழிகுரலருவித் திருவேங்கடத்து
எழில்கொள் சோதி எந்தை
தந்தை தந்தைக்கே"

எம்பெருமானுக்குச் சேஷபூதர்களான நாமெல்லோரும் இடைவிடாது ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் பழுதில்லாத கைங்கர்யம் (பணிவிடை) செய்ய வேணும் புருஷோத்தமனான ஸ்ரீமந்நாராயணனே ஸ்ரீதிருமலையில் ஸ்ரீதிருவேங்கடமுடையானாக ஸேவை ஸாதித்து வருகிறுன். அவன் திருவுள்ளம் உகக்குமாறு பணிவிடை செய்யவேணும். இது தான் ஜீவாத்மாவின் ஸ்வரூபம்.

"ஓடியோடிப் பலபிறப்பும் பிறந்து
மற்றோர் தெய்வம்
பாடியாடிப் பணிந்து பல்படிகால்
வழியேறிக் கண்டீர்
கூடிவானவரேத்தநின்ற
திருக்குருகூரதனுள்
ஆடுபுட்கொடியாதிமூர்த்திக்கு
அடிமை புகுவதுவே"
[4ம் பத்து 10வது திருவாய்மொழி]

வாழ்க்கையின் உண்மை நிலையறியாத நாம், கர்ம வச்யராகி பற்பல பிறவியேற்று இதரதைவங்களை நாடி, வீடுபேற்றினை பெருது உழலுகின்றோம். நித்யசூரிகளின் நாதனான, கருடத்வஜனான ஸ்ரீமந்நாராயணனுக்கு அடிமை பூண்டு ஸேவை செய்வதே மோக்ஷமடைய சிறந்த உபாயம். என்னே ஆழ்வாரின் கருணை! உபாகாரம்! நாமும் இதனைக் கடைப்பிடித்து உய்யலாமன்றோ!!

"ஆட்செய்தாழிப்பிரானைச்
சேர்ந்தவன் வண்குருகூர்நகரான்
நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன்
மாறன் சடகோபன்
வேட்கையால் சொன்ன பாடலாயிரத்-
துளிப்பத்தும் வல்லார்
மீட்சியின்றி வைகுந்தமாநகர்
மற்றதுகையதுவே"
[4ம் பத்து 10வது திருவாய்மொழி]

ஸ்ரீநம்மாழ்வார், எம்பெருமானுக்கு அடிமைசெய்து அன்புகுப் பாத்திரமானவர். மகிழம்பூ மாலையைத் தரித்தவர. இவர் அன்போடு பாடிய பாசுரங்களைச் சேவிப்பவருக்கு பரமபதம் கிடைப்பது உறுதி.

"அரியேறே! என்னம் பொற்சுடரே!
செங்கண் கருமுகிலே!
எரியே! பவளக்குன்றே!
நாற்றேளெந்தாயுனதருளே
பிரியா வடிமை யென்னைக்
கொண்டாய்! குடந்தைத்திருமாலே!
தரியேனினியுன்சரணம் தந்து
என் சன்மம் களையாயே"
[5ம் பத்து 8வது திருவாய்மொழி]

நமக்கும், ஸ்ரீபகவானுக்குமுள்ள உறவு நித்யமானது. நிரந்தரம் அடிமை பூணுவதே நமது கடைமை. அழிக்கவொண்ணுத இந்த சேஷி-சேஷசம்பந்தத்தை உணர்ந்த மாத்திரமே, நமது ஜன்மா கடைத்தேறி, அவனது ஸாயுஜ்யத்தை அடையலாம். இதுவே ஆழ்வார் கண்டு, நமக்குக் காட்டிய நல்வழி.

நமது பிறவிப் பயன்பெற இந்த உபாயமே தலைசிறந்தது.



## பஞ்ச சம்ஸ்காரம்

1. தாபம், 2. புண்டரம், 3. நாமம், 4. மந்திரம், 5. யாகம் என்பன. இந்த அற ஒழுக்கங்களைச் சிறந்த ஆசாரியன் மூலமாகப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

1. தாபம் : ஓமத் தீயில் தகிக்கப்பட்ட சங்கு சக்கரங்களைத் தோள்களில் தரித்துக்கொள்ள வேண்டும்.

2. புண்டரம் : நெற்றி முதலிய பன்னிரண்டு இடங்களில் ஊர்த்துவ புண்டரங்களை (நாமங்களை) அணிந்து கொள்ளுதல்.

3. நாமம் : 'ராமாநுசதாஸன்' என்ற தாசிய நாமத்தை தம் பெயரோடு சேர்த்துக்கொள்ளுதல்.

4. மந்திரம் : திரு அஷ்டாக்ஷர மந்திர உபதேசம் பெறுதல்.

5. யாகம் : சித்திர வடிவாக அல்லது விக்கரக வடிவாக உள்ள எம்பெருமானை ஆராதனை செய்தல்.

கற்புடைய பெண்ணுக்கு திருமாங்கல்யம் இன்றியமையாத தேவை போல் ஸ்ரீவைஷ்ணவனுக்கு பஞ்ச சம்ஸ்காரம் இன்றியமையாதன என்பர் நம்மாசாரியர்கள்.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

# எம்பெருமானாரை வியக்கவைத்த பெண்கள்

திரு. T.A. ஸ்ரீனிவாசன் - காஞ்சிபுரம்.

சிறந்த கல்விக் கடலாகவும் வேதாந்த வித்யா நிதியாகவும் எழுந்தருளியிருந்த ஸ்வாமி எம்பெருமானாரையே வியக்கவைத்த பெண்களை அன்னாருடைய திவ்ய சரிதத்தில் அனுபவிக்கலாம்.

எம்பெருமானார் திவ்ய தேச மங்களாசாஸனம் செய்துக் கொண்டு திருவாலி திருநகரி வட்டாரத்தில் எழுந்தருளுகையில் வழியில் எதிரே தீண்டாத குலப்பெண் எதிர்பட, ஸ்வாமி, 'நான் போகும் வரை சற்று ஒதுங்கிநில் பெண்ணே' என்று கூறினார். அந்த க்ஷணத்திலேயே அப்பெண் தான் நின்ற இடத்தை விட்டு அகலாமல், ஸ்வாமியை நோக்கி கீழ்கண்டவாரு ஒரு விளக்கமும் கேட்டாள். "பெரியவரே, எந்த பக்கம் ஒதுங்கவேணும் எனக்கு பின்புறத்தில் இருக்கும் திருக்கண்ணபுரம் நோக்கி நகரட்டுமா' பரம பவித்ர திருமேனியைக்கொண்ட தேவரை நோக்கி நகருவதற்கில்லை. எனது வலபுரத்தில் பரகாலன் திருமந்த்ர உபதேசம் பெற்ற திருமணங்கொல்லையை நோககி நகரவா இடப்புறத்தில் உள்ள திருவாலியை நோககி ஒதுங்கவா. சிறந்த அறிவாளியும், பூஜ்யருமான தேவரீரே எனக்கு விளக்க வேண்டும். இவ்வளவு விலக்ஷணமான சொல்லை எதிர்பாராத எம்பெருமானார் சிலவினாடிகள் அசைவறறு நின்று விடடார். பிறகு 'பெண்ணே என் வயோதிகமும அர்ததமற்ற படாடோபமும் எனது அகங்காரத்தை பலப்படுத்தி எனது கண்களுக்கு மாயத்திரையைப் போட்டுவிட்டன. உன்னைப்போல் சிறந்த பாகவததோத்தமியை அடையாளம் கண்டுபிடிக்க முடியாதபடி என்மனத்துக்கும் திரை போட்டு விட்டன. நான் தரித்திருக்கும் இந்த திருநாமங்கள் இந்த சந்யாசியைவிட உனக்கு பொருந்தும்' என்று விடைகொடுத்து, அப்பெண்ணை குளிர கடாக்ஷித்து தன் கோஷ்டியில் சேறுமாறும் அழைப்பு விடுத்தார். அவனும் எம்பெருமானார் கோஷ்டியில் சேர்ந்து, பின்னால் பெருமாள் பக்கலில சேர்ந்து நிற்கும் பெரும் பேற்றையும் பெற்றாள். இந்த பக்த சிரோமணியை திருமங்கை ஆழ்வார் சந்நதியில் சிலாரூபியாய் இன்றும் காணலாம்.

அடுத்த ஒரு நிகழ்ச்சி குரு பரம்பரா ஸாரமான ப்ரபந்நாம்ருதம் என்ற நூலில் காணக்கிடைக்கின்றது.

எம்பெருமானார் ஸ்ரீவில்லிப்புத்தூரிலிருந்து நெடுந்தூரம் பிரயாணம செய்து திருப்புளியகுடியை அடைந்தார். அப்போது பத்துவயதே நிரம்பிய ஒரு வைணவ சிறுப்பெண்ணை வீதியில் பார்த்த எம்பெருமானார் 'பெண்ணே திருக்குருகூர் (ஆழ்வார்திருநகரி) இங்கிருந்து எவ்வளவு தூரத்தில் உள்ளது' என்று வினவினார. அப்பெண் உடனே துடுககாய் 'ஸ்வாமி, தேவரீர, திருவாய்மொழி ஒதியதில்லையோ' என வினவினாள். அதைக்கேட்ட எம்பெருமானார் வியந்தவராய் "பெண்ணே, திருவாய்மொழி ஓதியதால் திருக்குருகூர் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது என்று எப்படி அறிய முடியும்" என்று கேட்டார். அவ்வார்த்தையைக் கேட்ட அப்பெண் புன்முறுவலோடு கூடியவளாய் 'திருப்புளியங்குடி திருக்குருகூரிலிருந்து ஒரு க்ரோச் (கூப்பிடு) தூரமேயுள்ளது என்று நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியில் மிக்க தெளிவாக உள்ளதே' என்று கூறி கடுவினை நஞ்சே! என்னுடைய முதே கவிவயல் திருப்புளியங்குடியாய்! வடிவினையில்லா மயர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியை கொடுவினையேறும் பிடிக்க நீயொரு நாள் கூவுதல் வருதல் செய்யாயே" (திருவாய்மொழி 9-2-10) என்னும் பாசுரத்தைப் பாடிக் காண்பித்தாள். அதைக் கேட்ட எம்பெருமானார் மிக வியந்து பேரானந்தமடைந்து அச்சிறு பெண்ணை கருணையோடு குளிர கடாக்ஷித்தருளினார்.

அடுத்த நிகழ்ச்சி எம்பெருமானார் திருக்கோளூர் நோக்கி அதன் அருகில் வரும்போது நடந்த சம்பவம். நம்மாழ்வார் திருக்கோளூர் எம்பெருமானை காதலனாய் கொண்ட தம் பெண் தாயாகிய தம்மை உதரித் தள்ளிவிட்டுத் திருக்கோளூர் நோக்கிப் போய்விட்டாள்

என்று புலம்புவதாக தாய்பாசுரமாக பாடியருளியுள்ளார். முதல் பாசுரத்திலேயே 'உண்ணும் சோறு பருகுநீர் என்று ஆரம்பித்து திண்ணம் என் இளமான் புகுமூர் திருக்கோளூரே" என்று முடிக்கிறுர். இந்த அநுபவத்தை மனதில் த்யானித்துக்கொண்டே எம்பெருமானார் திருக்கோளூர் நெருங்கும்போது, அந்த ஊரைவிட்டுப் புறப்பட்டுக்கொண்டிருக்கிருள் ஒரு பெண். அவளை நோக்கி எம்பெருமானார் கேட்கிறுர். 'நம்மாழ்வார் என் இளமான் புகுமூர் என்று திருக்கோளூரைப் போற்றி இருக்கிருரே. எல்லோருக்கும் புகுமூராயிருக்கும் இவ்வூர் உனக்கு புறப்படுமூராயிற்றே எங்ஙனம்' அதைக்கேட்ட அந்த பெண்பிள்ளை எம்பெருமானாரை வணங்கி, வைணவர்களுக்கு வேண்டிய பண்புகள் எண்பத்தொன்றை சூத்திரம் போல் சிறிய வாக்கியங்களில் அமைத்து, இவைகள் தன்னிடமில்லை என்று நைச்யானுஸந்தானம் பண்ணும் வகையில் பதிலளிக்கிருள். 'என் நன்றி செய்தேனா' என்பது நம்மாழ்வாரின் திருவாக்கு. எம்பெருமானுடைய துளவம் அணிந்த திருவடிகள் நம்மாழ்வார் இதயத்தில் புகுந்து துளவத்தின் மணம் திருமேனி முழுவதும் மணக்கும் படியானதை வியந்து என் நன்றி செய்தேனா' என்கிருர். இந்த வியப்புக்கு ஈடுபின்வருமாறு விளக்கம் உறைக்கின்றது. 'ஜடாயுவைப்போல் பிராட்டி சென்ற திசையை எம்பெருமானுக்குக் காட்டிக் கொடுத்து உயிர் துறந்தேனோ அல்லது சிறிய திருவடியைப் போல் கண்டனன் கற்பினுக்கணியை என்ற முழக்கத்தோடு வந்து குதித்து, பெருமானின் துயரத்தை தீர்த்தேனோ அல்லது வேறு என்ன உதவிதான் செய்தேன் நான் அறியேன் என்பதாக. இதே ரீதியில் தான் 81 வாக்யங்களும் அமைந்திருக்கின்றன. இவ்வாக்கியங்களுள் பலவற்றின் பொருள் எளிதில் புரிபடாது புராண இதிஹாஸங்கள் குருபரம்பரை, கர்ணபரம்பரையாக வரும் வரலாறுகளை அடியொற்றியே விளக்கம் காணவேணும். இவ்வாக்கியங்களில் எம்பெருமானார் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளும் பல உள்ளன. உதாரணத்திற்கு சில:-

1. அடிவாங்கினேனோ கொங்குப்பிராட்டியைப்போலே.
2. இங்கு பால் பொங்குமென்றேனோ வடுக நம்பியைப் போலே.
3. இருமிடறு பிடித்தேனோ செல்வப்பிள்ளையைப் போலே.
4. அவன் போனான் என்றேனோ மாருதியாண்டான் போலே.
5. அவன் வேண்டா என்றேனோ ஆழ்வானைப் போலே.
6. அத்வைதம் வென்றேனோ எம்பெருமானாரைப் போலே.
7. அந்தாதி சொன்னேனோ அமுதனாரைப் போலே.
8. கடலோன் என்றேனோ பெரிய நம்பியைப்போலே.
9. சுற்றிக் கிடந்தேனோ திருமாலையாண்டான் போலே.
10. சூளுரவு கொண்டேனோ திருக்கோட்டியூரார் போலே
11. உயிராய் பெற்றேனோ ஊமையாய்ப்போலே.
12. யான் சிறியேனென்றேனோ திருமலைநம்பியைப்போலே.
13. வாக்கினால் வென்றேனோ பட்டரைப் போலே.
14. வாயிற்கையிட்டேனோ எம்பாரைப்போலே.

இவைகளுக்கு திருக்கோளூர் பெண்பிள்ளை ரஹஸ்யம் என்றே பெயரிடப்பட்டுள்ளது. அமுதனார் அருளிச்செய்த இராமாநுஜ நூற்றந்தாதியை எம்பெருமானார் திருச்செவி சாத்தி உகந்தாப்போலே திருக்கோளூர் பெண்பிள்ளையினுடைய 81 வாக்கியங்களும் திருச்செவி சாத்தி மிக உகந்த ரஹஸ்யங்கள்.

இம்மாதிரி நமக்கும் தெரியாத நிகழ்ச்சிகள் அனேகம் நடந்திருக்கக்கூடும். முதல் நிகழ்ச்சியில் ஒரு கீழ்குலத்துப் பெண் மிக தெளிவாக விளக்கம் கேட்டாள். அடுத்தபடி ஒரு சிறுமி எம்பெருமானாரை வியப்பில் ஆழ்த்தினாள். கடைசி நிகழ்ச்சியில் ஒரு பெண் சிறந்த வைணவ தத்வார்த்தங்களை சிறு வாக்கியங்களாக தொகுத்து தம் புலமையால் எம்பெருமானாரை ப்ரமிக்க வைத்தாள். இந்நிகழ்ச்சியிலிருந்து எம்பெருமானார் காலத்தில் ஜாதிமத வேற்றுமையைக் கடந்து, ஆண் பெண் சிறுவர் உள்பட வைணவ கோட்பாடுகளை எவ்வளவு நுணுக்கமாய் அறிந்துள்ளனர் என்று புலப்படுகின்றது. அக்காலத்தில் நவீன விஞ்ஞான சாதனங்களான ஒலிபெருக்கி, வானொலி தூரதர்சன், அச்சேறினப் புத்தகங்கள் முதலியவை கண்டு பிடிக்கப்படவில்லை. அப்படியிருந்தும் அக்காலத்தில் எம்பெருமானார் தேசமெங்கும் புனி தயாத்திரை செய்து மடங்கள், 74 சிம்மாஸநாதிபதிகள் முதலிய பீடங்களை ஏற்பாடு செய்து வைணவ சமயத்தை நாடெங்கிலும் பரப்பி, வைணவ கோட்பாடுகளில் மிகத் தேர்ச்சி பெற்றிருந்தவர்களையும் கண்டு உகந்ததையும் நாம் அறியும் போது அதிசயிக்க வேண்டியுள்ளது.



# ஒரிசாவில் லக்ஷ்மி புராணம்

திருமதி. பிரேமாராவ் - பெங்களூர்.

எத்தனையோ லக்ஷ்மி புராணக கதைகள் கேட்டிருக்கிறோம். ஒரிசாவில் சொல்லும் லக்ஷ்மி புராணம் கேட்பவரின் மெய்சிலிர்க்க வைக்கும்படி உள்ளது. ஒரிசாவில் கார்த்திகை மாதத்து பௌர்ணமி, வியாழக்கிழமை லக்ஷ்மி பூஜை கொண்டாடுவது வழக்கம். இந்த பூஜை ஏற்பட்ட கதையே லக்ஷ்மி புராணம்.

ஒரு சமயம் ஒரு கீழ்ச்சாதி பெண் மனமுருகி லக்ஷ்மியைத் துதித்து பூஜித்து வந்தாள. தன்னாலியன்ற அளவு புஷ்பம், ஆரத்தி முதலியன செய்து கஞ்சி மட்டும் நைவேத்தியம் செய்து பூஜையை முடித்தாள். மகாலக்ஷ்மி அந்தப் பெண்ணின் ஆராதனத்தில் மனமுருகி விட்டாள. மறுகணமே அந்தப் பெண்ணின் குடிசைக்கு ஒரு ஏழைப்பெண் போல சென்று அந்தக் கஞ்சியை வாங்கி குடித்தாள். அந்தப் பெண்ணோ அன்னையை யார் என்று புரிந்து கொள்ளவில்லை. அன்னையின் பாதக்கமலத்தைக் கழுவி பூ இட்டு பொட்டிட்டு மனம் குளிர்ந்தாள். நெடுஞ்சாண் கிடையாக விழுந்தாள்.

அந்தப் பெண் தரையில் விழுந்து வணங்கி எழுந்து பார்த்தால் அன்னை அமர்ந்திருந்த இடத்தில் ஒரு தாமரை மலர் மட்டும் இருந்தது. அந்தப் பெண்ணுக்கு புரிந்து விட்டது வந்தது யாரோ அல்ல சாட்சாத் அன்னை மகாலக்ஷ்மிதான் என்று அன்னை அந்த சக்கிலிப்பெண் வீட்டில் கஞ்சி குடித்ததை நாரதர் ஸ்ரீ பலராமருக்கும், கிருஷ்ணருக்கும் தெரிவித்துவிட்டார். ஆதிசேஷ அவதாரமான பலராமர் கோபத்தால் கொதித்தார.

அன்னை மகாலக்ஷ்மி கோவிலுக்கு திரும்பவந்து உள்ளே நுழையப்போனார். பலராமர் உள்ளே வராதே உனக்கு இங்கே இடமில்லை. மிலேச்ச பெண் வீட்டு உணவு உண்ட நீ இங்கே வசிக்கும் தகுதி இழந்து விட்டாய் என்றார். லட்சுமி ஸ்ரீநாராயணரை ஏறிட்டாள். அண்ணுவை எதிர்க்கும் சக்தியில்லாமல் தலை குனிந்து நின்றிருந்தார்.

மகாலக்ஷ்மி வெளியேறி விட்டாள். விசுவகர்மாவை அழைத்து தனியே ஒரு கிரஹம் நிர்மானித்து வசிக்கத் துவங்கினாள். இங்கே கிருஷ்ண பலராமர் உணவு தயாரிக்க வழியில்லாமல், பிச்சை எடுக்கும் நிலைக்காளாயினர். லக்ஷ்மிவாசம் செய்த இடத்தில் மூத்தவள் வாசம் செய்யத் துவங்கினாள். அண்ணன், தம்பி தரித்ர நாராயணர் ஆயினர். லட்சுமி அகன்றதால் இருவரிடமும் தேஜஸ் குறைந்து, ஊரார் ஏசி, பேசி அவமானப் படுத்தினர். ஆபரணம், வஸ்திரம் எல்லாம் போயின. குடிக்க தண்ணீர் கூட கொடுக்காமல் ஊராா துரத்தினாரகள். ஒரிரு முறை உணவு உண்ண வாய்ப்பு கிடைத்தது. ஆனால் லக்ஷ்மியின் லீலையால் சமைப்பது சக்கிலிப்பெண் தான் என்பதறிந்து உணவு உட்கொள்ளாமலேயே வெளியேறினர். நாளுக்கு நாள் நீர, ஊண், உறக்கம், ஒய்வுமின்றி இளைத்து உரு மாறிப் போனார்கள். ஒருநாள் லட்சுமி இவர்கள் நிலைக்கண்டு கண்ணீர் வடித்தாள். இவர்களுக்கு மேலும் சோதனைகள் கொடுத்து வருத்தக்கூடாது என எண்ணினாள். தன் தோழியை அனுப்பி அழைத்து வரச்செய்தாள்.

கிருஷ்ண பலராமரை வாசனைத் திரவியங்களால் நீராட்டி உயர்ந்த ஆடை ஆபரணம் கொடுத்து அலங்கரிக்க செய்தாள். உயர்ந்த உணவு வகைகளைத தயாரித்து பரிமாறினாள். மகாலக்ஷ்மி கிருஷ்ண பலராமர் முன்னிலையில் வரவேயில்லை. பலராமர் தோழியிடம் விசாரித்தாள். பெண்ணே உன் எஜமானி யார்? நான் நன்றி தெரிவித்து விடைபெற வேண்டும. தயவு செய்து வெளியே அழைக்க முடியுமா என மிக வினயமாக கேட்டார்.

ஐயா என் எஜமானி வந்த விருநதினர்களுகசூ பக்தியுடன் பசியாற விருந்து படைத்த கீழ்ச்சாதி பெண் என்றாள். என்ன கீழ்ச்சாதி பெண்ணா? அடே கிருஷ்ண மோசம போனோம் வா வெளியேறலாம். இநத ஆடை ஆபரனம் எதுவுமே வேண்டாம் எடுத்து எறி என கோபததால் குதித்தார். கிருஷ்ணனின் சமாதானம் எதுவும்

பலிக்கவில்லை. அந்த அரண்மனை விட்டு வெளி யேறத் துவங்கினார்.

லீலா விநோதனான ஸ்ரீகிருஷ்ணர் லக்ஷ்மியை வெளிவரும்படி வேண்டிக்கொண்டார். லக்ஷ்மியிடம் போதும் கோபம், போதும் இந்த பாரா முகம், போதும் இந்த பிரிவு தயவு செய்து நடந்ததை மறந்து நம் க்ருஹத்துக்கு வா என்றார்.

இல்லை நான் வரவில்லை ஏன் என்றால் என்னை வெளியேற்றியது அண்ணா பலராமர். அவர் அனுமதியின்றி நான் வருவது உசிதமில்லை என மலாலட்சுமி மறுத்தாள். கிருஷ்ணர் பலராமருக்கு எல்லாவற்றையும் புரியவைத்தார். அண்ணா அனைத்துக்கும் ஆதிகாரணம் அன்னை தானே அப்படிப்பட்ட அன்னை லக்ஷ்மியை கோவிலிலிருந்து வெளியேற்றினால் உலகமே ஸ்தம்பித்து விடும். தயவு செய்து லக்ஷ்மியை மனம் நிறைந்து திரும்பி வரச் சொல்லி அழைக்கவேண்டும் என வேண்டிக்கொண்டார். மேலும் பக்திக்கு மேல் ஜாதி, கீழ் ஜாதி என்ற பேதம் கிடையாது எனப் புரியவைத்தார். பக்திக்கு சிரத்தை மட்டுமே உயர்ந்தது என பெரியவரான அண்ணாவை ஏற்றுக் கொள்ள வைத்தார்.

மகாலக்ஷ்மி நான் திரும்ப கோவிலுக்கு வந்து உங்களுடன் வசிக்க வேண்டுமானால் எனக்கு ஒரு வரம் தரவேண்டும் என்றாள். கிருஷ்ணர் ததாஸ்து என்றார். அவருக்கா தெரியாது லக்ஷ்மி கேட்கும் வரம் என்ன வென்று? என் பக்தை செய்த கார்த்திகை பௌர்ணமி லக்ஷ்மி பூஜை உலகில் அனைவரும் செய்து பயனடைய வேண்டும் என்றாள்.

லக்ஷ்மி உன் விருப்பப்படியே நடக்கும். அது மட்டுமின்றி அன்று செய்யும் பூஜைக்கு நான் உன்னுடன் இருந்து அருள் பாலிக்கிறேன் என கிருஷ்ணர் வரம் கொடுத்தார். இன்றும் இந்த லக்ஷ்மி பூஜையை செய்து ஒரிசா முழுதும் கோலாகலமாக அலங்கரித்து பயன் அடைகிறார்கள். இந்த புராணத்தை படித்தும் கேட்டும் லக்ஷ்மி கடாக்ஷத்துக்கு பாத்திரர்களாகலாமே.



## தென்னாட்டில் உள்ள நவதிருப்பதிகள்

(1) **திருவரகுணமங்கை** - சுவாமி பெயர் விஜயசனர், நித்தியநந்தர், தாயார் பெயர் வரகுணவல்லி.

(2) **திருக்கோளூர்** - ஸ்ரீதரன், வைத்தமாநிதிப் பெருமாள், ரிக்ஷேபவித்தன், தாயார்பெயர் பாரிசாதவல்லி, கோரூர் வல்லி.

(3) **திருப்புளிங்குடி** - காய்ச்சின வேந்தப்பெருமாள் தாயார் பெயர் - மலர்மகள்.

(4) **திருக்குளந்தை** - மாயக்கூத்தன், தாயார் பெயர் குழந்தைவல்லி.

(5) **ஸ்ரீவைகுண்டம்** - வைகுந்தநாதன், கண்ணபிரான் தாயார் பெயர் - மாமலராள், வைகுந்தமங்கை.

(6) **ஆழ்வார்திருநகரி அல்லது திருக்குருகூர்** - ஆதிநாதப்பெருமாள், ஆதிகேசவன், தாயார் பெயர் - ஆதிநாதவல்லி.

(7) **தென்திருப்பேரை** - மகரகுண்டலத்தார் தாயார் பெயர் - தாமரையாள்.

(8) **திருத்தொலைவில்லிமங்கலம்**-அரவிந்தலோசனன், தாயார்பெயர் - கருந்தடல்கண்ணியம்மை.

(9) 8, 9 ஆகிய இரண்டையும் இரட்டைத் திருப்பதி என்று கூறுவர். பெருமாள் தேவப்பிரான் தேவநாதன், தாயார் பெயர் - மலராள், புவிமங்கை.

தொகுப்பு: ஸ்ரீ அழகிய சிங்கர்



# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் ஆர்ஜித சேவைகள்

| வ. எண் | சேவை/உத்ஸவங்களின் பெயர்கள் | அனுமதிக்கப் படும் ஆட்களின் எண்ணிக்கை | காலம் | நாள் | ஒவ்வொரு சீட்டின் தொகை |
|---|---|---|---|---|---|
| 1. | சுப்ரபாதம் | ஒருவர் | காலை 3-00 | தினமும் | ரூ. 120/- |
| 2. | தோமாலை சேவை | ஒருவர் | காலை 3-45 to 4-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 3. | அர்ச்சனை | ஒருவர் | காலை 4-30 to 5-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 4. | ஏகாந்தசேவை | ஒருவர் | மாலை 10-30க்கு மேல் | தினமும் | ரூ. 120/- |
| 5. | கல்யாணோத்ஸவம் | ஐவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 2500/- |
| 6. | சிறப்பு கல்யாணோத்ஸவம் | இருவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 750/- |
| 7. | ஆர்ஜித பிரம்மோத்ஸவம் | ஐவர் | மாலை 1-00 | தினமும் | ரூ. 500/- |
| 8. | தோலோத்ஸவம் | அறுவர் | மாலை 1-30 | தினமும் | ரூ. 750/- |
| 9. | அர்ச்சனானந்தர தரிசனம் | ஒருவர் | காலை 5-00 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 100/- |
| 10. | ஆமந்த்ரணோத்ஸவம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 620/- |
| | | வெள்ளிக் கிழமைகளில் ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமை மட்டும் | ரூ. 620/- |
| 11. | தோமாலை மற்றும் அர்ச்சனை | ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமைகள் மட்டும் | ரூ. 420/- |
| 12. | சஹஸ்ர தீபஅலங்காரசேவை | ஐவர் | மாலை 5-30 மணிக்கு பிறகு | தினமும் | ரூ. 500/- |
| | | **வாராந்திர சேவைகள்** | | | |
| 1. | விசேஷ பூஜை | ஐவர் | காலை 6-00 | திங்கள் | ரூ. 3000/- |
| 2. | அஷ்டதளபாத பத்மாராதனம் | ஐவர் | காலை 5-30 | செவ்வாய் | ரூ. 3500/- |
| 3. | சஹஸ்ரகலசாபிஷேகம் | அறுவர் | காலை 5-30 | புதன் | ரூ. 5000/- |
| 4. | திருப்பாவாடைசேவை | அறுவர் | காலை 5-30 | வியாழன் | ரூ. 5000/- |
| 5. | பூராபிஷேகம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 750/- |
| 6. | புனுகுப் பாத்திரம் | ஒருவர் | மாலை 3-30 | வெள்ளி | ரூ. 300/- |
| 7. | கத்தூரிக்கிண்ணம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 150/- |
| 8. | நிஜபாத தரிசனம் | ஒருவர் | காலை 5-30 | வெள்ளி | ரூ. 100/- |
| 9. | ஆடைஅலங்கார சேவை | இருவர் (கணவன்-மனைவி) | காலை 3-30 | வெள்ளி | ரூ.12,250/- |
| | | **வருடாந்திர சேவைகள்/உத்ஸவங்கள்** | | | |
| 1. | பவித்ரோத்ஸவம் | ஐவர் | காலை 8-00 | ஆகஸ்ட் | ரூ. 7500/- |
| 2. | வஸந்தோத்ஸவம் | பதின்மர் | மாலை 2-00 | ஜனவரி | ரூ. 3000/- |
| 3. | புஷ்பயாகம் | ஐவர் | காலை 6-00 | நவம்பர் | ரூ. 3500/- |
| 4. | அபித்யேக அபிஷேகம் | ஐவர் | காலை 8-00 | ஜூன் | ரூ. 2000/- |
| 5. | பத்மாவதி பரிணயம் | ஐவர் | மாலை 3-00 | மே | ரூ. 5000/- |
| 6. | புஷ்ப பல்லக்கு | ஐவர் | மாலை 5-30 | ஜூலை | ரூ. 1000/- |
| 7. | கோயில் ஆழ்வார் திருமஞ்சனம் | பதின்மர் | காலை 11-00 | வருடத்திற்கு நான்குமுறை | ரூ. 3000/- |
| | (உகாதிக்கு முன்னாள், ஆனிவார ஆஸ்தானம், சுவாமி பிரம்மோத்ஸவம் மற்றும் வைகுண்ட ஏகாதசி) | | | | |
| 8. | தெப்போத்ஸவம் | ஐவர் | மாலை 6-00 | வருடத்திற்கு 5 நாட்கள் | ரூ. 2500/- (ஒருநாள்) |

மேலும் தகவல்களுக்கு அணுகவும்: 79277, 77777 Ext.3679 மற்றும் 3589

# த்வய மந்திர மகிமை

திரு. கே.ஏ. தேவராஜன் - சென்னை.

ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ரஹஸ்ய த்ரயம் நித்யா நுஸந்தேயம். அதிலும் த்வயத்துக்கு சமமான மந்திரம் வேறெதுவுமில்லை. ஒரு பங்குனி உத்திர நன்னாளில் நம் பெருமாளும், ஸ்ரீரங்கநாச்சியாரும் சேர்த்தியில் ஏகாஸனத்தில் எழுந்தருளியிருக்க ஸ்வாமி எம்பெருமானார் சரணுகதி கத்யம் அருளிச்செய்தார். நம் போன்ற சேதனர்கள் உஜ்ஜீவிக்கும் மிகப் பரந்த திருவுள்ளத்தினால் பெருமாளும் பிராட்டியும் ஆன சேர்த்தியில் (மிதுனத்தில்) ஜகதாசாரயரான பகவத் ராமாநுசர் ப்ரபத்தி செய்தார். சரணுகதி தாம் செய்வதால் சகல ஜீவர்களும் திவ்ய தம்பதிகளின கடாக்ஷம் பெற்று தாம் பெற்ற பேறு அனைவரும் பெற வழிவகுத்தார்.

அந்த சமயம் ஸ்ரீரங்கநாதர் தம் சோதி வாய் திறந்து உடையவரை நோக்கி அருளிச்செய்த வார்த்தை:-

"த்வயம் அர்த்தாநுஸந்தானேன
ஸஹ சதா ஏவம் வக்த்தா
யாவச் சரீர பாதம் அத்ரைவ
ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வத"

"ஜீயரே! சதா சர்வ காலமும் நமது த்வய மந்திரத்தை தாத்பர்யத்துடனே அநுசந்தானம் பண்ணிக்கொண்டு தேஹாவஸான கால பர்யந்தம் நமது இருப்பிடமான திருவரங்கத்திலே சுகமாக எழுந்தருளி இருப்பீராக" என்பது பெருமாள் அருளிச்செய்த மிக மதுரமான திருவாக்கு.

நமது பூர்வாசார்யர்கள் அனைவரும் ஒரு மிடறாக த்வயா நுசந்தானத்தையே தம் உபசேதங்களில் வலியுறுத்தி வந்தார்கள். ஸவாமி எம்பெருமானாரின் அபராவதாரமாக கொணடாடப்படும் ஸ்ரீமணவாள மாமுனிகள் தவயாநுசந்தானததிலேயே ஆழங்காற்பட்டிருநதார் என்பதை அவர்தம திருவடி பணிந்த அஷ்ட திக்கஜாசார்யரகளில் ஒருவரான எறும்பியப்பா அருளிச்செய்த சுலோகத்தில் நாம் உணரலாம்:-

"மந்த்ர ரத்ந அநுசந்தான
ஸந்தத ஸ்புரிதாதரம்"

ஸ்ரீமணவாள மாமுனிகளின் திருப்பவளமானது சதா த்வயா நுசந்தானத்தால் பூரித்து இருககும் த்வய அர்த்தத்தை சதா சிந்திப்பதின் மகிமையால் அவருடைய திருமேனி முழுவதும் மயிர்கூச்சல் இப்படியிருககும் என்பது இதன் பொருள். இவ்வாறே ஸ்ரீபிரதிவாதி பயங்கரம அண்ணன் ஸ்வாமியும் மாமுனிகளின் நிஷ்டையை தமது ஸ்லோகங்களில் அருளிச செய்தார்.

த்வய மந்திரம்: ரஹஸ்யங்கள் மூன்று. அவையாவன திருமந்திரம், த்வயம், சரம ஸ்லோகம்.

திருமந்திரம்:-

"ஓம் நமோ நாராயணுய"

த்வயம்:-

"ஸ்ரீமந் நாராயண சரணௌ
சரணம் ப்ரபத்யே|
ஸ்ரீமதே நாராயணுய நம:"

சரம ஸ்லோகம் :-

"ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய
மாம் ஏகம் சரணம் வ்ரஜ |
அஹம் த்வா சர்வ பாபேப்யோ
மோக்ஷ இஷ்யாமி மாஸுச ||"

திருமந்திரமும், சரம ஸ்லோகமும் த்வய மந்திரத்தின் அங்கமாக உள்ளவை என்பதை வைணவ பூர்வாசார்யர்கள் விளக்கி உள்ளனர். த்வய மந்திரம் பூர்வ வாக்கியம், உத்தர வாக்கியம் என்று இரு பகுதியாக உள்ளது. இதில் பூர்வ வாக்கியம்

"ஸ்ரீமந் நாராயண சரணௌ
சரணம் ப்ரபத்யே" என்பது.

இதன் பொருள் இனி விவரிக்கப்படுகிறது.

ஸ்ரீமந் : ஸ்ரீ சப்தத்தாலே பிராட்டியின் பெருமை பேசப்படுகிறது. "அகலகில்லேன் இறையுமென்று அலர் மேல் மங்கையாகிய" பிராட்டி எப்போதும் எம்பெருமானான திருவேங்கடவனுடன் சேர்ந்தே இருப்பவள். பிராட்டியுடன் கூடியிருக்கையே எம்பெருமான் நாராயணனுக்கு பரப்ரஹ்மத்வத்தை அறுதியிடுகிறது. பிராட்டியோடு கூடின ஸ்ரீநிவாஸனே ஆச்ரயிக்க தகுந்தவன். பிராட்டி நாராயணனை ஆச்ரயித்து உள்ளது போல் சகல ஜீவர்களும் பிராட்டியை ஆச்ரயித்தே இகலோக, பரலோக ஆனந்தத்தை அடையமுடியும். மதுப்பினால் பிராட்டியின்

சேர்த்தியும், புருஷகார க்ருத்ய மும் உணர்த்தப்படுகிறது.

நாராயண : நார+அயன- நார சப்தத்தினால சேதன அசேதன ரூபங்கள் கணக்கறறவை எனற பொருள தேறும. அயன சபதம குறிக்கும் பொருளாவது சகல சேதன, அசேதன ரூபங்களும எம்பெருமானாலே தரிக்கபபடு கினறன. அதாவது சேத நாசேதனங்கள எல்லாம எம்பெ ருமானுக்கு சரீரமாகவும், அவன ஒருவனே அனைததுககும் சரீரி யாக இருக்கிறுன என்பதே தாத பர்யம்.

சேதந, அசேதநங்களில் வேறு பாடு உண்டு. சேதநர்கள ஞானத்தை ஸ்வரூபமாக உடை யவரகளாகையாலே அசேதநங களில் காட்டிலும வேறுபட்டு உளளனர். சேதநரகளிலும் பதத சேதநர, முக்த சேதநர எனறு இருவகை உண்டு. பத்த சேத நர உண்டியே உடையே எனறு ஓடித்திரியும் ஸமசாரிகள். முகத சேதநர் ஸம்சார பற்று அற்று எம்பெருமானையே தமககு எல் லாமாக கொண்டிருப்பவரகள அசேதநம 24 தத்துவம, சேத நன் 25வது தததுவம. எமபெ ருமான் 26வது தத்துவம் 24 தததுவங்களாக இருககும் அசே தநங்களுககும், 25வது தததுவ மான ஜீவனுககும் ஆதாரமாக இருபபது 26வது தததுவமான நாராயணன். அநத எமபெரு மான் ஸௌசீல்யம், வாதஸல யம், ஸௌலபயம், ஸவாமித்வம இத்தகைய ஆஸரயன ஸௌகர் யாபாதக கலயாண குணங களை உடையவன. பிராட்டி யோடு எப்போதும கூடியிருக கையாலே அவன் பூரணன.

சரணௌ :

அதததகைய பூரததியும, சகல கல்யாண குணஙகளும நிரமபப பெற்ற நாராயணுன எம்பெருமா னின் திவ்யமான திருவடிகள இரண்டு உள்ளன.

திவ்யமான திருவடிகளை உடைய நாராயணனின் திரு மேனி அப்ராக்ருதமானது. கௌஷீதகி உபநிதத்தில் விளக் கியபடி எம்பெருமானின் திரு மேனி பஞ்ச ஔஷத மயமா னது. அந்த அப்ராகருத திரு மேனியாலேயே எம்பெருமான அனைவர்ககும் ஆச்ரயிகக வல் லவனாகிறுன். சேதநர்களின் கைங்கர்யத்தை ஏற்று அவர்க ளுக்கு பரமானந்தத்தை அளிக் கிறுன். பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை ஆகிய ஐந்து நிலைகளிலும் எம்பெ ருமான் அப்ராக்ருத திருமேனி உடனேயே ஆவிர்பவிக்கிறுன்.

### சரணம் ப்ரபத்யே :

இந்த சப்தத்தால் சரணுக தனான சேதந ஸ்வரூபமும், எம்பெருமானான சரண்யனின் ஸ்வரூபமும் விளக்கப்படுகிறது. நாம் அனைவரும் சேதநர்கள். நாம் எம்பெருமான் இடமிருந்தே உண்டானவர்கள். அவனுக் காகவே படைக்கப்பெற்றவர்கள். அவனிடம் இருந்தே ஸத்தை பெற்று வாழ்பவரகள். அவ னையே உபாயமாகவும், உபேய மாகவும் கொண்டு வாழ்வதே சேதநர்களாகிய நமக்கு வாழ்சசி ஆகும்.

ப்ரபத்யே என்னும் பதம் "பத்லு கதௌ" என்னும் தாதுவிலிருந்து தோன்றியது. இதன பொருளாவது கதியை சொல்வது. அதாவது மனதின் உறுதியை அல்லது அத்யவ ஸாயத்தை குறிப்பது.

ப்ரபத்தி மூன்று வகைப்ப டும. அவையாவன: காயிக ப்ர பத்தி, வாசக ப்ரபத்தி, மானஸ ப்ரபத்தி, இவற்றுள் மானஸ ப்ரபத்தியே தலை சிறந்தது. ஞானான் மோக்ஷம் என்பது சகல சாஸ்திர ஸித்தமாகை யாலே மானஸ ப்ரபத்தியே எம் பெருமானுக்கு உகந்தது. குறும பறுத்த நம்பியின் சரித்திரம் இதற்கு ப்ரமாணம்.

"ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: |
ப்ராதி கூல்யஸ்ய வர்ஜநம் |
ரக்ஷிஷ்யதீதி விஸ்வாச: |
கோப்த்ருத்த வரணம் வ்ரஜ |
ஆத்ம நிக்ஷேப கார்பண்ய: |
ஷட்விதாம் சரணுகதி: ||"

என்னும் சாஸ்திர வசனத்தின் படி எம்பெருமானே நமக்கு உபா யம் அவனே நமக்கு உபேயம என்ற மகாவிச்வாசமே சேதந னுக்கு உரிய லக்ஷணம்.

இனி உததர வாக்கியம் ஸ்ரீமதே நாராயணுய நம: என்பது.

### ஸ்ரீமதே :

பிராட்டி முதலாக எல்லா நித யரகளும், முக்தர்களும், சேதநர்க ளும எம்பெருமானுக்கு அடிமை பிராட்டி முதல் பதத சேத நர் வரையில் எம்பெருமானுககு விசேஷணங்களாக உள்ளன. இத்தகைய விசேஷணங்களோடு கூடிய எம்பெருமான் ஒருவனே அவனே நாராயணன். இது விசிஷ்டாத்வைத தத்துவம.

### நாராயண+ஆய :

பரமாத்மானவனும, சகல சேதநாசேதநங்களுக்கு அந்தர் யாமியானவனும், அவற்றை எல்லாம் தாங்குபவனும், சகல கல்யாண குணங்களை உடை யவனும், ஸ்ரீய: பதித்வமா கிற பூர்த்தியை உடையவனும், எந்தவிதமான ஹேய குண மும் இல்லாதவனும், அபராக்

ருத திவ்ய திருமேனியை உடையவனும், ஸ்ரீவைகுண்ட நிகேதனனும், வடிவழகை உடையவனும் ஆன எம்பெருமான் நாராயணனுக்கு உடைமை ஆத்ம வஸ்து.

ஸர்வ கால, ஸர்வ தேச, ஸர்வ அவஸ்தைகளிலும் வகுத்த விஷயமான ஸ்ரீமந் நாராயணனுக்கு அடிமைப்பட்டிருத்தலும், அந்த எம்பெருமான் உகப்புக்காகவே கைங்கர்யங்கள் செய்வதும் ஆத்மாவுக்கு அந்தரங்க நிரூபகம்.

"கண்ணபுரம் ஒன்று
உடையானுக்கே உரியேன்
மற்றவர்க்கு உரியேனோ!"

என்னும் கலியனின் திருவாக்கு இங்கு அனுசந்தேயம்.

நம: "யானே நீ என்னுடைமையும் நீயே" என்னும் ஆழ்வார் ஸ்ரீஸூக்தியின்படி அஹங்கார, மமகாரம் நீங்கப்பெற்று பரகத ஸ்வீகாரத்துக்கு உரிய ஆத்மா.

"அகிஞ்சன: அநந்ய கதி:
த்வத் பாதமூலம் சரணம் ப்ரபத்யே"

என்னும் நிலையில் இருப்பான். ஸித்தோபாய நிஷ்டரின் லக்ஷணம் இதுவே ஆகும்.

பெற்ற மைந்தனுக்கு ஈன்ற தகப்பன் அருள் புரிவது போலவே, தாது ப்ரஸாதாத் என்கிறபடியே எம்பெருமான் அருள்புரிய சேதநர்களுக்கு பரம புருஷார்த்தமான கைங்கர்யமும், மோக்ஷமும் கிடைக்கிறது.

## முடிவுரை :

ஆர்த்த ப்ரபந்நராயும், த்ருப்த ப்ரபந்நராயும், ஞானாதிக்யம் உடையவராயும், பக்தி பாரவஸ்யம் உடையவராயும் இருந்த நம் ஆழ்வார்களும், பூர்வாசார்யர்களும் தமது ஸ்ரீஸூக்திகளால் த்வயத்தின் மகிமையை அருளிச் செய்தார்கள். ஆசார்ய ருசி பரிக்ரஹீதமான த்வயாநுசந்தானமே நமக்கு எல்லாவிதமான பேற்றையும் அளிக்க வல்லது. இதுவே நமக்கு அந்ய சேஷத்வ, மோகத்வ, சரணத்வத்தை கழித்து, அநந்யார்ஹ சேஷத்வ, போகத்வ, சரணத்வத்தை அளிக்கும். நமது வாழ்வின் குறிக்கோளும் ஸ்ரீய: பதியான எம்பெருமானுக்கும், அவன் அடியார்களுக்கும் உகந்த தொண்டு செய்வதே ஆகும். இப்படிப்பட்ட ஸித்தோபாய நிஷ்டர் வர்த்திகும் இடமே வைகுந்தம் ஆகும். அந்த வைகுண்டமே திருமலை ஆகும்.

"திருவடியை நாரணனை
கேசவனை பரஞ்சுடரை!
திருவடி சேர்வது கருதி
செழுங்குருகூர்ச்சடகோபன்!
திருவடிமேல் உரைத்த தமிழ்
ஆயிரத்துள் இப்பத்தும்!
திருவடியே அடைவிக்கும் திருவடி
சேர்ந்து ஒன்றுமினே!"

***

# பகவானின் 22 அவதாரங்கள்

பாற்கடலில் யோக நித்திரை செய்து கொண்டிருந்த பகவான் தன்னுடைய நாபி கமலத்திலிருந்து பிரம்ம தேவனைத் தோற்றுவித்தான். இதுவே • பகவானின் முக்கியமான 22 அவதாரங்களுக்குள் முதன்மையான தோற்றம். அவைகளாவன:

1. பிரம்மதேவனிடம் மானசீக புத்திரர்களாக ஜனித்த ஸநந்குமாராதிகள் நால்வர். 2. பூமியை உத்தாரணம் செய்தபிறகு யஜ்ருவராக மூர்த்தி. 3. பிரம்மாவின் புத்திரர் தேவரிஷி நாரதர். 4. பதரிகாச்ரமத்தில் தவம் செய்யும் நர, நராயணணர்கள். 5. ஸாங்க்ய மதத்தை போதித்த கபிலர். 6. அத்ரி- அனஸூயை இவர்களுக்குப் பிறந்த தத்தாத்ரேயர். 7. ஆகூதி, ருசி தம்பதிகளுக்குப் பிறந்த யஜ்ஞன். 8. ஸ்வாம்புவ மனுஷவுக்குப் பௌத்ரனுகப் பிறந்த ரிஷபதேவன். 9. ப்ருது சக்ரவர்த்தி. 10. மத்ஸ்யாவதாரம் (மீ ன்). 11. கூர்மாவதாரம் (ஆமை) 12. தன்வந்திரி 13. மோஹினி அவதாரம் 14. ஹிரண்யகசிபுவை ஸம்ஹரிக்க எடுத்த நரஸிம்ஹாவதாரம் 15. அதிதி, கச்யபர் இவர்களுக்குப் பிறந்த வாமனாவதாரம். 16. பரசுராமர் 17. பராசுர மஹரிஷிக்கு ஸத்யவதியிடம் உண்டான வேதவியாஸர் 18. ராவணனை நிக்ரஹம் செய்த இராமாவதாரம் 19. பலராமன் 20. ஸ்ரீ கிருஷ்ணன் 21. பௌத்தாவதாரம். 22. கலிமுற்றும் போது விஷ்ணு யசஸ் என்பவருக்கு மகனாகப் பிறக்கபோகும் கல்கி அவதாரம் ஆனால் இவற்றுள் ஸ்ரீகிருஷ்ணன் பகவானின் பரிபூர்ண அவதாரமாகும். ஸ்ரீகிருஷ்ணன் ஸாஷாத் பகவானின் முழுமையான ஸ்வரூபமே. இவைகள் யாவும் நாராயணனின் அம்சாவதாரங்களாகும்.

தொகுப்பு :டி. பூபதிராவ் - சென்னை.

# நாலாயிரத்தில் நம்மாழ்வார் பழமொழிகள்

கோம்பூர் திரு. ஆர்.டி. சாரி - சென்னை.

1. "தீர இரும்புண்ட நீரதுபோல"

காய்ச்சின இரும்பு அதில் அடங்கியுள்ள வெப்பம் தீரும்படியாக பருகிய தண்ணீர் போல எம்பெருமானே என்னுடைய வேட்கை யாவும் தீர என்னைப் பருகி எனக்கு ஆராவமுதமாகி இருக்கின்ற திருமாலே என்று நம்மாழ்வார் கூறுகிறுர்.

2. "வெள்ளத் திடைப்பட்ட நரியினம் போலே"

ஊழி முதல்வனே எம்பெருமானே! திருமாலே! மீண்டும் பிறவி வேண்டாம் என்று அஞ்சினாலும் குறையாத கர்ப்பப் படுகுழியில் தள்ளி மானிட ஜென்மம் எடுக்கச் செய்வாயோ என்று என் நெஞ்சு வெள்ளத்தில் சிக்கிக் கொண்ட நரிக்கூட்டம் போல தடுமாறுகிறது.

3. "உணங்கல் கெடக் கழுதை உதடாட்டம் கண்டு என்பயன்"

ஞானப்பிரான் அடியார்களாகவும் வேதங்கள் வல்லவர்களாகவும் உடைய வைணவத்தவர்களை வணங்குங்கள். இதை விட்டுவிட்டு மற்றவற்றைச் செய்வது வீண். 'எப்படிக் கழுதை உண்ணும் போது உதடசைவதைக் காண்பது போல்'

4. "ஆராவார் துணையென்று அலைநீர்கடலுள் அழுந்தும்நாவாய் போலே"

அலைகள் பொருந்திய மாகடலுள், கப்பல் கவிழும்போது கப்பலில் செல்வோர், கரை சேரத் துணை யார்? என்று நடுங்குவர். அஃதே போல் பிறவியாகிய கடலில் சிக்கித் தவிககும் என்னைக் காத்து நல்வீடளிப்பவன் யார? எம்பெருமானே என்று உறுதியாகக் கூறுகிறுர். அவ்வண்ணமே சக்கரமும், சங்கும் தாங்கி பூரண கிருபையுடன் கூடி நம் ஆழ்வாருடன் கலந்து கூடினான்.

5. "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்"

பசித்தவனுக்குப் புசிக்கச் சோறு போலவும், தாகம் உள்ளவனுக்கு அள்ளிப்பருக தண்ணீர் போலவும் , சுவை நுகர்ந்து மென்று அசைக்க வெற்றிலை போலவும், எம்பெருமான் தாரகமாகவும், போஷகமாகவும் போக்யமாகவும் உள்ளான்.

6. "கறந்த பாலுள் நெய்யே போல்"

கறந்த பாலுள்ளே நெய மறைந்திருந்து பின்னர் தயிராகி வெண்ணையாகி காய்ச்சியபின் நெய்யாக மணந்து இனித்துச் சுவைக்கிறது.

இவ்வண்ணமே . சர்வேஸவரன் எல்லா இடங்களிலும், எல்லாவற்றிலும் ஒன்ருகக் கலந்து அநதர்யாமியாக மறைந்து நின்று அவற்றை இயக்கும் மாயம. செய்பவன், அச்சர்வேஸ்வரனை எங்கே காண்பது, பரமபதத்தில காண பொல்லா அழுக்குடம்பினைக் களைந்து, தேக சம்பந்தம் அறவேண்டும். அவதாரம் செய்யும் போது அவனைக் காண அவனே அருள்பாலிக்க வேண்டும். பாலில் நெய் போல அந்தர்யாமித்வம் கண்ணுக்குத் தோன்ருது. அர்ச்சாவதாரமும் நினைத்தபடி கிடையாது.

7. "நாய் கூழைவாலால் குழைக்கின்றது போல் என் உள்ளம் குழையும்!"

நாய் தன் குட்டை வாலைக் குழைத்து தன் அன்பைக் காட்டும். அடியாரின் உள்ளமும் எம்பெருமானை அழைக்கும் போது குழைக்கிறது. எம்பெருமானே உன்னுடைய திருவருள் அடியேனிடம் அன்பைக் காட்டாது போய்விடுமா? மனங்கலங்கும் என் நிலை கூழை வாலை குழைக்கும் நாய் போலானதே!

8. "மெய்யனாகும் விரும்பித் தொழுவார்க்கெல்லாம் பொய்யனாகும் புறமே தொழுவார்க்கெல்லாம்"

அலர்மேல்மங்கை மார்பினில் உறைகின்ற எம்பெருமானையே உறுதிப் பொருளாக எண்ணித் தொழுபவர்க்கு எம்பெருமான் மெய்யனாவான். பயனை எதிர்பார்த்து மேலெழுத் தொழுகிறவர்கட்கு அவன் தன்னைக் காட்ட மாட்டான். அப்படிப்பட்ட சர்வேஸ்வரனான எம்பெருமான் "தனதாள் அடைந்தார்க்கெல்லாம் சரணமாவான், அன்பனாவான், அணியனாவான் நெருங்கி நிற்பான்".

இவ்வண்ணமே திருமங்கை மன்னன் தன்னுடைய பெரிய திருமொழியில் கூறுகிருர. "தேச

மிலாதவர்க்கும் நினையாதவர்க கும் அரியன்"

9. "வைகுந்தம் புகுவது
மண்ணவர் விதியே"

பூவுலகில் உள்ளவர்கள் பரம பதத்தை அடைவது பெருமபாக் கியமே!

10. "மின்னின் நிலையில்
மன்னுயிராக்கைகள்"

அழிவற்ற ஆத்மா தங் கிய உடல், "மின்னல் வந்து தோன்றி மறைவது போல" அற்பமாயும் நிலையறறதாயும உள்ள இயல்பினை உடையது.

11. "திருவுடை மன்னரைக் காணில்
திருமாலைக் கண்டேனே"

நற்பண்புகளும், சீலமும், தர்ம நியதிப்படி செங்கோலோச் சும் குறைவில்லாத செல்வம் கொண்ட மன்னர்களைக் கண் டால் திருமாலைக் கண்டேனே என்கின்றார் ஆழ்வார்.
ஆழ்வார் திருவடிகளே சரணம்!






திருமலை திருப்பதி தேவஸ்தானம்
திருப்பதி.

## ஆலய தரிசன சுற்றுலா

தெலுங்கு புதுவருடப்பிறப்பு 'யுகாதி' நாளான 8-4-97 தேதி முதற்கொண்டு ஒவ்வொரு வாரமும் ஞாயிறு மற்றும் திங்கட்கிழமைகள் தோறும் திருப்பதி இரயில் நிலையத்திற்குப் பின்புறம் உள்ள தி.தி. தேவஸ்தானத் தாரின் இரண்டாவது தரும சத்திர வளாகத்திலிருந்து இந்த 'ஆலய தரிசன சுற்றுலா' பேருந்து, காலை 7-00 மணி அளவில் புறப்பட்டு மதியம் 1-20 மணி அளவில் புறப்பட்ட இடத்திற்கே வந்து சேரும்.

**காணும் ஆலயங்கள்**

1) ஸ்ரீவேணுகோபால சுவாமி கோயில்
காருவேட்டுநகரம்.

2) ஸ்ரீவேதநாராயண சுவாமி கோயில் -
நாகலாபுரம்.

3) ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில் -
நாராயணவனம்.

4) ஸ்ரீபத்மாவதி தாயார் கோயில் -திருச்சானூர்.

**பேருந்துக் கட்டணம்**

பெரியோர் : ரூ. 38/- (நபர் ஒருவர்க்கு)

சிறியோர் : ரூ. 17/- (நபர் ஒருவர்க்கு)

[சிறப்பு தரிசன வசதியும் செய்துதரப்படும்.]

**இந்தப் பேருந்தில் பயணிக்கும் பக்தர்களுக்கு அன்ன பிரஸாதம் ஒருமுறை வழங்கப்படும்.**

# நறையூர் நின்ற நம்பி

திரு. ஆர். சுப்பாராவ் - திருக்கோவலூர்

கும்பகோணம் நகருக்கு 9 கி.மீ. தொலைவில் மணிமுத்தாறு நதிக்கரையில் அமைந்துள்ள திருநறையூர் என்னும் நாச்சியார்கோயில் சோழ நாட்டில் உள்ள நாற்பது திவ்விய தேசங்களில் ஒன்றாகும். இத்திவ்விய தேசத்து நம்பி எம்பெருமான் திருமங்கை ஆழ்வாருக்கு ஸ்ரீவைஷ்ணவ இலச்சினை செய்தருளினார். நம்பி எம்பெருமான் மீது திருமங்கை ஆழ்வார் கொண்டிருநத காதல் கடலினும் பெரியதாகும். நம்பி எம்பெருமானையும் பிராட்டியாரையும் இங்குள்ள நீர் வளம், நிலவளங்களையும் இங்குள்ள ஸ்ரீவைஷ்ணவ மக்களையும் அவர் உள்ளம் குளிர ஊன் குளிரப் பாடியருளினார். நூறு பாசுரங்களை அவர் இத்தலத்துக்கே பாடியருளினார். வேறு எந்த திவ்விய தேசத்திலும் அவர் இந்த அளவுக்கு பாடவில்லை.

கோயில் கர்ப்பகிரகத்தில் நின்ற கோலத்தில் ஸ்ரீ சீனிவாசன் என்னும் திருநாமத்துடன் மூலவர் எழுநதருளியுள்ளார். ஒரு கையில் திருவாழியையும் ஒரு கையில திருச்கங்கையையும் கொண்டு கிழக்குதிசை நோக்கி அவர காட்சி அருளுகிறார். மேதாவி மாமுனிவரின் பிரார்த்தனையை ஏற்று அவருக்கு அனபுமகனாய் அவதரித்த ஸ்ரீ வஞ்சுளவல்லியை அன்று திருமணம் கொணட அதே திருககோலத்தோடு இனறும பெருமாள் காட்சி அருளுகிறார். "நறையூர் நினற நம்பி" என்று திருமங்கை ஆழவாரின் மங்களாசாசனம பெறறவர் இவரே. பெருமாளுக்கு நமபி என்னும திருநாமும் உணடு. கலியன் உகந்த திருநாமம.

நம்பி எம்பெருமான வலது புறம் ஸ்ரீ வஞ்சுளவல்லிததாயார் கொள்ளை அழகுடன் நின்ற கோலத்தில் காட்சி அருளுகிறார். மேதாவி என்ற மாமுனிவர் நொச்சிக் கொடியின் கீழ் இத்தாயாரைக் கண்டெடுத்தார. எனவே தாயாரின திருநாமம் வஞ்சுளவல்லி (நீர் நொச்சிக் கொடி) என்று ஆயிற்று. பெருமாளையும் தாயாரையும் நின்ற



திருக்கோலத்தில் ஒரே இடததில் காண்பது வேறு எங்கும் காண முடியாத அரிய, அற்புதக் காட சியாகும். திருமகளின் பிரபாவம திருவரங்கத்திலும் நிலமகளின பிரபாவம திருவில்லிப்பூத்தூரி லும் ஓங்கி நிற்பதைப்போன்று நீளாதேவியின் பிரபாவம் இஙகு உயர்ந்தோங்கி ஒளி வீசுகி றது. தலத்தின் பெயரே நாச் சியார் கோயில். வேறு விளக கம் தேவை இல்லை. மூலவர அருகில் சங்கர்ஷணன, அநிருத தன், ப்ரத்யும்னன் புருஷோத தமன் ஆகிய பெருமாளகள எழுந்தருளியுள்ளார்கள்.

கர்பபகிரகத்தின் வெளியே மகாமண்டபத்தில் படசிராஜன் என்னும் கருடன தனிச்சநநி தியில் கோயில் கொண்டுள ளார். இவர் சாளக்கிராம சிலை வடிவில், வாகன அமைப் பில் நீள்சிறகும் நீள்முடியும் கொண்டும் இருண்ட மேனியும் திரண்ட தோள்களுமாய் வீர கம்பீரத்துடன் காட்சி அருளு கிறார். அனுதினமும் ஆறு கால பூஜை நடைபெறுகி றது. இவருக்கு மோதகத் தில் (கொழுக்கட்டை) விருப்பம் மிகுதி. புஷ்பாங்கிகள் அணிவ தில் இவருக்கு பூரண மகிழ்ச்சி. பெரும் வரப்பிரசாதி. கருணை. முத்திரம் தீனபந்து.

ஒருசமயம் மகாலெக்ஷ்மி மகா விஷ்ணுவிடமிருந்து பூவுலகில் வாசம் புரிந்திட நேரிட்டது. அப்போது பட்சிராஜன் பரம னது திருவுள்ளம் அறிந்து பூம களைத் தேடி பூவுலகமெங்கும் பறந்து திரிந்தார். ஒருநாள் பூம களை அவர் இங்கு ஒரு பூஞ்சோ லையில் கண்டார் உள்ளம் பூரித் தார். மேதாவி என்னும் மாமு னிவர் இல்லத்தில் முனிவரின் அன்புமகளாய் மகாலெக்ஷ்மி வளர்ந்து வருவதை அறிந்தார். விஷ்ணுவுக்கு செய்தி விரைந் தது. விஷ்ணு மேதாவி முனி வரின் பிரார்த்தனையை ஏற்று மகாலெக்ஷ்மியை இங்கு மணம் புரிந்தருளினார். அன்று முதல் கருடன் இங்கு நிரநதரமாய் நிலைத்துவிட்டார்.

ஆண்டுக்கு இருமுறை இங்கு பிரம்மோற்சவம் நடைபெருகி றது. பெருமாள் கருட வாக னத்தில் அமர்ந்து ஓலைச் சப்ப ரத்தில் திருவீதி உலா எழுந்தரு ளுகிறார். ஸ்ரீவஞ்சுளவல்லித்தா யார் அன்னப்பட்சி வாகனத்தில் அமர்ந்து உடன் எழுந்தருளுகி றார். மார்கழித் திங்களிலும் பங் குனித் திங்களிலும் நான்காம் நாள் (இரவு 7 மணி அளவில்) கருடசேவை விழா தொடங்குகி றது கருடாழ்வார். வாகன மண் டபம் புறப்படுகிறார். அப்போது ஸ்ரீ பாதம் தாங்குவோர் நால்வர் மட்டுமே வருகிறார்கள். வான ரர்கள் சேர்த்தபின மூலை ஒன றுக்கு நாலவராகவும் பின் எண மர், பதின்மர்களாகவும் அவரக ளது எண்ணிக்கை உயரநது கொண்டே வருகிறது. இது ஒரு மாடககோயில். அதுமட் டும அல்ல. வாகனம் கலகரு டன்! பலபடிகள் மூலம் இறங கிவரவேண்டும் எனவே அத தருணத்தில் ஸ்ரீபாதம தாஙகு வோர எண்ணிக்கை உச்சகட டத்தை எட்டிவிடுகிறது. மெய் சிலிர்க்க வைக்கும் பேரானநதக காட்சி இது.

நாச்சியார கோயில கருடசே வைக் காண நாலாயிரம் கண வேண்டும்! புகழ்ச்சி அலல. இது முற்றிலும் உண்மை!

## விண்ணப்பம்

தி.தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீவேங் கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும ஆர்ஜித ஸேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத்தொகையினை தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராப்ட்' D.D. அல் லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பு வதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம்.ஓ. மூலம் அனுப் புதலைவிட அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) தி.தி. தேவஸ்தானம், திருப் பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின் எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத்தக வல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் விரைவான பயனைத்தரும்.

செயலாட்சித் தலைவர்,
தி.தி. தேவஸ்தானம், திருப்பதி.

# திருமலையில் தங்குவசதி நன்கொடைத்திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில் நின்றவண்ணம் அருள்புரியும் வேங்கடவனைக் காண நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் நாள்தோறும் திருமலைக்கு வருகை புரிகின்றனர். அவர்கள் திருமலையில் தங்குவதற்கென்று திருமலை-திருப்பதி தேவஸ்தானம் பல தர்ம சத்திரங்கள், குடில்கள் (காட்டேஜுகள்) விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்குவசதி கட்டிடங்களைக் கட்டியுள்ளது. ஆனால் நாளுக்குநாள் திருமலைக்கு வருகை புரியும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை பெருகிவருவதால் திருமலையில் மேலும் பல குடில்கள், விருந்தினர் விடுதிகள், தர்ம சத்திரங்கள் கட்டுவதென தி.தி. தேவஸ்தான மேலாண்மை முடிவு செய்துள்ளது. யாத்திரிகப் பொதுமக்கள் பயனுறும் இப்புதிய தங்குவசதி கட்டிடங்கள் கட்டுவதில் யாத்திரிகர்களும் பங்குபெறும் வகையில் நன்கொடை அளிப்பதில் தனி நபர்கள் மட்டுமன்றி தனியார் நிறுவனங்களும், வர்த்தக அமைப்புகளும் அறக்குழுக்களும் முன்வந்துள்ளன. அவர்களுக்கு உதவிடும் வகையில் தி.தி. தேவஸ்தானத்தாரின் 'தங்குவசதி நன்கொடை'த் திட்டத்தின்கீழ், பின்வரும் கட்டிட வகைகளுக்கு நன்கொடை அளிக்க வழிவகை செய்யப்பட்டுள்ளது.

### குடில்கள்

1) திருமலை கருடாத்ரி நகர் குடில்களின் முதல்தளத்தில் சி, டி பகுதிகள் கட்டுதற்கு அளிக்க வேண்டிய நன்கொடை ரூ. 2,25,000 ஆகும். முதல் தளத்தின் கட்டிட அளவு 883 பரப்படிகளாகும். ஒவ்வொரு குடிலும் இரண்டு பகுதிகளைக் கொண்டது. ஒவ்வொரு பகுதியும் (குளியலறைகள் உள்ளடக்கிய) '10 x 10' என்ற அளவு கொண்ட இரண்டு படுக்கை அறைகளைக் கொண்டு விளங்கும்.

### விருந்தினர் விடுதிகள்

'ஸப்தகிரி சத்திரங்கள்' எனும் கட்டிடங்களில் அலக்நந்தா எனும் ஐந்தாவது கட்டிடத்தில் அறைத்தொகுதி ஒன்று கட்டுதற்கான நன்கொடை ரூ. 1,50,000 ஆகும். இக்கட்டிடத்தொகுதிகள திருமலையில் குடிநீர் வடிகால் இல்லத்திற்கு அருகே உள்ளன. கட்டப்படும் ஒவ்வொரு அறைத தொகுதியும் 11.7" x 20.6" அளவு கொண்டதாக விளங்கும். மேலும் குளியலறை மற்றும் உடுப்பு அறைகளுடன் உள்ளடக்கி விளங்கும் இவ் அறைகளின் மொத்த பரப்பளவு 342 சதுரடிகளாகும். இக்கட்டிடப் பணி ஒரு வருடத்திற்குள் கட்டிமுடிக்கப்படும்.

திருமலை சுராபுரம் தோட்டத்தில் சிறப்புக் குடில்கள். ஒவ்வொரு தளத்திற்கும் நன்கொடைத்தொகை ரூ. 5,00,000 ஆகும். இந்த இடம் திருலைக்கோயிலின் வடகிழக்குப் பகுதியில் ஒரு கி.மீ. தூரத்தில் உள்ளது. ஒவ்வொரு தளமும் 1110 சதுர அடிகள் பரப்பளவுகொண்டு இந்தக் கட்டிடம் விளங்குகிறது. ஒவ்வொரு தளமும் குளியலறை மற்றும் உடுப்பு அறைகளை உள்ளடக்கி, 12' x 14' அளவு கொண்ட இரண்டு படுக்கை அறைகள் கொண்டு விளங்கும். இதுதவிர ஒவ்வொன்றும் 12' x 12' என்ற அளவில் கூடிய உணவருந்தும் மற்றும் வரவேற்பு அறைப்பகுதிகளைக் கொண்டு ஓய்வுக்கூடம் ஒன்றுடனும் திகழும். வாகனங்கள் நிறுத்துவதற்கான வசதிகளுடன் கூடிய இக்கட்டிடம் ஒரு வருடத்திற்குள் கட்டப்படும்.

### வழிமுறைகள்

நன்கொடையாளர்கள் ஒரு வெள்ளைத்தாளில், கட்டுதற்கு விருப்பமான குடில்களின் விவரங்களைக் குறிப்பிட்டு, குடில்கள் / அறைத்தொகுதிகள் ஆகியவற்றிற்குச் செலுத்த வேண்டிய நன்கொடைத் தொகையினை, (திருப்பதியில் பெறும் வகையில்) 'Executive Officer, T.T. Devasthanams' எனும் பெயரில் ஒரு தேசிய வங்கி காசோலை மூலமாக பெற்று அதனை "செயலாட்சித தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி-517501" எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப்போக்குவரத்து ஆங்கிலத்தில் அமைதல் நலம். நன்கொடையினை தனிநபரோ/இருவர் இணைந்தோ/தனியார் நிறுவனங்களோ/ வர்த்தக அமைப்புகளோ வழங்கலாம். குடில்கள்/அறைத் தொகுதிகள்/தளங்கள் யாவும் நன்கொடையாளர்களுக்கு வரிசைக்கிரமமாக ஒதுக்கப்படும்.

### நன்கொடையாளர்களுக்கு சலுகைகள்

நன்கொடையாளர்கள் ஒருமுறை தங்கும்போது தொடர்ந்து 10 நாட்களுக்கு மிகாமல், மொத்தத்தில் வருடத்தில் இலவசமாக 60 நாட்களுக்கு தங்கள் தங்குவசதிகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதுபோது அவர்கள் பராமரிப்புக் கட்டணம் மட்டுமே செலுத்துதல் வேண்டும். இந்த வசதியினை தனிநபர் நன்கொடையாளர் மட்டுமே அவர்தம் ஆயுட்காலத்தில் அவரோ, அவரது துணைவியாரோ அல்லது அடுத்த வாரிசுதாரரோ பயன்படுத்திக்கொள்ள முடியும். இருவர் இணைந்தது/தனியார் நிறுவனம்/ வர்த்தக அமைப்பு/அறக்கட்டளை போன்ற நன்கொடையாளர்கள் 20 ஆண்டுகளுக்கு இலவசமாக தங்கள் நன்கொடை தங்கு வசதிகளைப் பயன்படுத்திக்கொள்ளலாம்.

நன்கொடைகளின் பெயர் மற்றும் ஊர் விவரம் ஒருவர் பெயரில் நினைவுச்சின்னமாக கற்பலகை ஒன்றில் பொறிக்கப்பட்டு நன்கொடை பெறப்பட்ட குடில்களின் முன் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். மேற்படி இக்குடில்கள்/அறைத்தொகுதிகள் போன்றவற்றிற்கு வழங்கப்படும் நன்கொடைத் தொகைகளுக்கு எந்தவிதமான வருமானவரி விலக்கும் அளிக்கப்படமாட்டாது.

**செயலாட்சித் தலைவர், திருமலை திருப்பதி தேவஸ்தானம்.**

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## பதினேழாம் அத்தியாயம்

## சிரத்தாத்ரய விபாக யோகம்

(உமைப்ரியன்)

**பகவான் சொன்னது:**

ஸத்காரமானபூஜார்த்தம் தபோ
தம்பேன சைவயத் ।
கிரியதே ததிஹ ப்ரோக்தம்
ராஜஸம் சலமத்ருவம் ॥ (18)

"புகழுக்காகவும், பெருமைக்காகவும், பலர் போற்றவும் செய்யப்படும் ஆடம்பரமான எவ்விதமான தவமும் உறுதியற்றது. மேலும் தற்காலிகமானதுகூட. ஆகவே அந்த தவம ராஜஸ தவம் என்று கூறப்படுகிறது."

[தவம் என்பதை தன்னைத் தானே திருத்திக் கொள்ளும், உயர்த்திக்கொள்ளும் ஒரு 'முயற்சி' என்றே வைத்துக் கொளளலாம். தனது எண்ணங்கள், செயல்கள் தன் ஆன்ம மேம்பாட்டிற்காகவும் அதனாற்ருன் சமுதாயம் செம்மையுறவும் உறுதுணையாக அமைதல் அவசியம். ஆகவே ஒருவனது செயல்கள் தன்னலத்திற்காகவோ, வெறும் ஆடம்பரத்திற்காகவோ, பலர் போற்றிப் புகழவோ அமைதல் கூடாது. எப்போது ஒருவன் தன் புலனின்பங்களை மறந்து, மனத்தை அடக்கி, செயல்களை மேற்கொள்கின்ருனோ, அப்போதுதான் அச்செயல்கள் தூயனவாக அமைந்து புனித இலக்கை அடையனவாக அமையும். ஒரு சமய நிகழ்ச்சியில் பங்கேற்கும் சமயத் தலைவரோ, பொது நிகழ்ச்சியில கலந்துகொள்ளும் அரசியல் தலைவரோ தஙகளை இனம் காட்டிக் கொள்வதற்காகத் தங்களைச் சுற்றிக் கூட்டம் ஏற்படுத்திக் கொள்வதையும் தங்கள் காலில் வீழ்நது வணங்குவதையும், தங்களைப் போற்றி ஒலிப்பெருககியில் பேசுவதையும் தவிர்க்கும்போதுதான் அவர்கள் உண்மையான வழிகாட்டிகளாக, தலைவர்களாக மக்கள் உள்ளங்களில் என்றென்றும் வாழ்வார்கள். அவ்வாறு அல்லாத ஒரு வாழ்க்கை நெறியினை மேற்கொள்பவர்களின் செயல்களின் பயன்கள் தற்காலிகமாகவே அமையும். உறுதியற்றே விளங்கும். அவர்கள்தம் செயல்களாகிய தவம் ராஜஸதவம் எனறே அழைக்கப்பெறும்.]

மூடக்ராஹேணுத்மனோ யத்பீடயா
க்ரியதே தப: ।
பரஸ்யோத்ஸாதனார்த்தம் வா
தத்தாமஸ முதாஹ்ருதம் ॥ (19)

"மூடக்கொள்கைகளைப் பின்பற்றி, அதன்மீது உள்ள ஆர்வத்தால் தன்னையோ, பிறரையோ துன்புறுத்துவதற்கோ அல்லது பிறரது வாழ்க்கையை அழித்தற்காகவோ மேற்கொள்ளப்படும் தவம் 'தாமச தவம்' என்று அழைக்கப்படும்."

[அறிவினைப் பயன்படுத்தி மேற்கொள்ளப்படும் பாசம், அன்பு, தியாகம் போன்றவற்றிற்கு மதிப்பு இருக்கும். ஆனால் உணர்ச்சியின் வெறியால் மேற்கொள்ளப்படும் ஏந்தவிதச் செயலும் ஆக்கப்பூர்வமான பயன்களை விளைவிக்காது. இவ்வகையில் பலர் தங்கள் உடலைப் பலவாறு வருத்தித் தங்கள் சமய ஈடுபாட்டினைப் பறைசாற்றிக் கொள்வர். பலர் வீம்புக்காக, பகட்டுக்காக பட்டினி இருந்து விரதங்களை



மேற்கொள்வர். இவர்களைவிட ஒருபடி மேலே சென்று, மற்றவர்களது வாழ்க்கையை நாசமாக்க வேண்டும் அதனாற்றுன் அவர்கள் படும் வேதனையைக் கண்டு மகிழ வேண்டும் என்ற ஒரு மனிதாபிமானமற்ற எண்ணத்தில் அவர்களுக்கு பில்லி, சூன்யம் என்ற மந்திர, தந்திர வகைகளைப் பயன்படுத்திக் கேடு விளைவிப்பவரும் உண்டு. இத்தகையோரின் தவம் தாமச தவம் என்று அழைககப்பெறும. இவர்கள் ஆத்ம ஞானம்' என்பதை பெறத்தகுதியற்றவர்கள்.]

*தாதவ்யமிதி யத்தானம் தீயதே*
*அனுப்காரிணே ।*
*தேசே காலே ச பாத்ர ச*
*தத்தானம்ஸாத்விகம் ஸ்ம்ருதம் ॥ (20)*

“தக்க இடத்திலே, தக்க காலத்திலே பிரதிபலன் செயயாதவர் என்ருலும், தகுதி உள்ளவர்களுக்கு எந்த தானம் (கொடை) கொடுக்கப்படுகிறதோ, அந்த தானம் சாத்விக தானமாகக் கருதப்படும்.”

[தானம் என்பதை பதவி, புகழ், பாராட்டு என்பனவற்றிற்காக அளிக்காதபோது அந்த தானம் சாத்வீக தானமாகிறது. எந்தவிதமான தன்னலப்பயனையும் எதிர்பார்க்காது தானம் அளிப்பதே சிறந்தது. இல்லாதார்க்கு, வேண்டுவோர்க்கு அதுவும் தக்க காலத்தில் அளிக்கப்படும் தானத்திற்குப் பெருமை உண்டு. அதாவது சமுதாயம் பயன்பெறுதற்காக அளிக்கப்படும் தானத்தில் சுயநலம் இருக்காது. செய்யும் தானம் யாவுமே அந்த இறைத்தொண்டிற்கே, தான் அளிப்பது அந்த இறைவனின் திருவுள்ளமே என்ற உணர்வினால செய்யப்படும் தானம் சாத்வீக தானமாக (சதுதுவதானமாக) பெயர் பெறுகிறது.

*யத்து ப்ரத்யுபகாரார்த்தம்*
*பலமுத்திச்ய வா புன:*
*தீயதே ச பரிக்லிஷ்டம் தத்தானம்*
*ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ (21)*

“மேலும் நன்றிக்கடன் செலுத்தவோ பிரதிபலன் எதிரபாரததோ மனவருத்தத்துடன் அளிககப்படும் தானம ராஜஸ தானம என்று அழைக்கபபெறுகிறது.”

[தருவது ‘நான்’ என்பதும், கொடுப்பது ‘அவனுக்கு’ என்பதும் இல்லாத ஒரு உணரவுடன் பொருள் மற்றவர்க்குத் தருவதே ‘தானம்’ ஆகும். ராஜஸ தானம் என்பது தானம் தருவதை பிரதிபலன் எதிரபார்த்து செய்வதாகும். அடுத்தவனைவிட தான் அதிகமாகத் தானம் தந்து பெயர், புகழ், பாராட்டு பெற வேண்டும் என்று எண்ணி அரைமனதோடு மேற்கொள்பவர்களின் தானம் ராஜஸதானம என்றழைக்கப்படும். கோயிலுக்கு குழல் விளக்கு தானம் செய்யும்போது தன் பெயரை, தன் நிறுவனத்தின் பெயரை அதன மீது எழுதிக்கொள்ளும் போது, அங்கு தங்களை விளம்பரப்படுத்திக் கொள்கின்றனர். இது ராஜஸ தான வகையாகும். கோயில்களில் தன் பெயர்களால் அர்ச்சனை, அபிஷேகம், ஆராதனை ஆகியவற்றிற்காகப் பணத்தை தானமாக அளிக்கும்போது இறைவனிடம் பல வரங்களை வெளிப்படையாகவோ, மனதினிலோ வேண்டுகின்றுன். இதுவும் ராஜஸ தான வகையில் அடங்கும்.]

*அதேசகாலே யத்தானமபாத்*
*ரேப்யஸ்ச தீயதே ।*
*அஸத்க்ருதமவக்ஞாதம்*
*தத்தாமஸ முதாஹ்ருதம் ॥ (22)*

“தகாத இடத்திலும தகாத காலத்திலும் தகுதியில்லாதவர்களுக்குப் பணிவின்றி இகழ்சசியுடன ஆணவத்தோடு செய்யப்படும் தானமானது தாமஸ தானமாகும்.”

[தானம் அளிப்பவர்களுக்கு மட்டுமின்றி, தானம் பெறுபவர்களுக்கும் சில தகுதிகள் இருத்தல் வேண்டும. வஞ்சகர்கள், எத்தர்கள், சோமபேறிகள், கயவர்கள், கொடியோர் போன்ருேரக்கு அளிக்கப்படும் தானம பொருளற்றது; குறைவுடையது; பயனில்லாதது. மேலும் தானம் கொடுககும்போது, ஏதோ கடனுக்காக அளிப்பதோ, அல்லது ஆணவத்துடன் அளிப்பதோ, அல்லது பிறரை எள்ளி நகையாடி அளிப்பதோ கூடாது. அத்தகு தானம் பெருமையுடையது அன்று. தானம் அளிக்கப்படும்போது அதன் சிறப்பு தரும் இடத்தைப் பொருத்தும், காலத்தைப் பொருத்தும் அமையும். அவ்வாறின்றி தேவையில்லாத இடத்தில், அவசியமில்லாத நேரத்தில் அளித்திடும் தானத்திற்கு எந்தவிதமான பயனும் இருக்காது. இத்தகு தான உணர்வுகள் தமோ குணத்தாரிடமே மேலோங்கி அமையும்.]

(தொடரும்)



# வண்ணத்துப்பூச்சியை வதைக்காதே!

(கண்ணபுரத்தான்)

மூத்தப்பன் பட்டி ஒரு சிறு கிராமம். நாற்பது ஐம்பது வீடுகள் தாம் அநதக் கிராமத்தில் இருந்தன. சுறறிலும் மாந்தோப்பு, தென்னந்தோப்பு, இலுப்பைத் தோப்புக்கள். ஊருக்குள் முல்லை, மல்லிகைத் தோட்டங்கள் ஒவவொரு வீட்டாரும் வீட்டின் பின்புறம் கத்தரி, மிளகாய், சுணடைக்காய், வெண்டைக்காய்ச் செடிகளை நட்டு நீர் ஊற்றி வளர்தது வந்தனர்.

தோப்புக்களில் செம்பட்டைச் சிறகுள்ள செம்போத்து, பச்சை நீலவண்ணச் சிறகுள்ள மரங கொத்தி, உமி நிறமுள்ள உமிக குருவி, கரிய வண்ணம் உள்ள கரிச்சான் குருவி முதலிய பல பறவைகள் வாழ்ந்து வந்தன. கூடுகட்டிச் சில பறவைகள் முட்டை இட்டுக குஞ்சு பொறித்து அவற்றுக்குத் தீனி தேடிக் கொண்டு வந்து ஊட்டி வளர்த்து வந்தன. கிளிகள் எல்லாம் இலுப்பைத் தோபபில் இலுப்ப மரப்பொந்தில வாழ்ந்து வந்தன.

முல்லை, மல்லிகைத் தோட்டங்களிலும் வீட்டுக்குப் பின்புறமுள்ள செடிகளிலும் வண்ணத்துப் பூச்சிகள் வந்து தங்கள் பல வண்ணச் சிறகுகளை அசைத்துப் பறந்து கொண்டே தேன் உண்ணும்; நீல நிற வண்டுகள் ரீங்காரம் இட்டுக் கொண்டே அந்தச் செடிகளில் பூத்த மலர்களில் உள்ள மகரந்தப்பொடிகளைத் தினனும், வண்ணத்துப் பூச்சி சிறகுகளை அசைதது ஆடிககொண்டே ஒவவொரு செடிககும் செலவது கண்ணுககு மிக அழகாக இருக்கும. நீல வணடுகளின் ரீஙகார ஓசை செவிக்கு இனிமையாக இருக்கும்.

அநதக கிராமததில கோபு, பாலு, சீனு எனனும மூன்று சிறுவர்கள பககததுப பககத்து வீட்டில வழநது வந்தாரகள. மூன்று பேரும நணபரகள. இரணடாம வகுப்பில படித்துக கொண்டிருந்தனர்.

அவரகள காலையில வீட்டுத தோட்டததிறகு வரும வணணத்துப பூச்சியைப பிடித்துக காலி டபபாவில அடைத்துவைதது விளையாடுவர. மலரகளைச சுறறும் வண்டுகளை அடித்துத் துரத்துவர்.

சாயங்காலத்தில் தோபபுக ளுககுப் போய் அஙகு மரங் களில உளள கூடுகளைப் பாரப் பர. பறவைகள முட்டை இட டிருக்கும. அவற்றை எடுத்து உடைப்பர. மரபபொந்துகளில் உள்ள கிளிக குஞ்சுகளைப பிடித்துத துன்புறுத்துவர். அவை படுகின்ற பாடடைப் பார்ததுச் சிரிப்பர.

ஒருநாள் கோபு, பாலு, சீனு மூன்று பேரும் தெருககூத்துப் பாரக்கப் பக்கத்து ஊருககுத தஙகள் தாத்தாக்களுடன் போனார்கள். அரிச்சந்திரன் கதை கூததாக நடநதது. இரவு இரணடு மணி வரை நடநதது. அங்கேயே மூனறு பேரும் தம தாத்தாக்களுடன் படுத்துத் தூங்கிவிட்டனர்.

அப்பொழுது ஒரு வனத தேவதை வந்தது. அது கோபுவை ஒரு வண்ணத்துப் பூச்சியாகவும் பாலுவை ஒரு நீல வண்டாகவும், சீனுவை ஒரு கிளிக்குஞ்சாகவும் மாற்றிவிட்டது.

மூன்றுபேரும் பக்கத்திலுள்ள தோட்டங்களுக்கும் தோப்புகளுககும் பறந்து போனார்கள். கோபு வண்ணத்துப்பூச்சியாக அங்கும இங்கும் பறந்துகொண்டிருந்தான். மலருககு மலர் தாவி மகிழ்ச்சியாக விளையாடிக்கொணடிருநதான். அழகான வண்ணத்துப்பூச்சியைப் பார்த்ததும் அந்தச் சிறுவரில் ஒருவன் அதைப் பிடித்துக காலி 'டப்பா' ஒன்றில் அடைத்து வைத்து விட்டுப் பள்ளிகூடம் போய்விடடான். இருண்ட அந்த டப்பாக் குள் வண்ணத்துப பூசசியாக இருந்த கோபு மிகவும் வருததப் படடான். தான் பல வண்ணத்துப் பூச்சிகளைப் பிடித்துத் துன்பம் தந்ததை நினைத்துக் கொண்டு அழுதான்.

வண்டாக மாறிப் போன பாலு பூந்தோட்டம் ஒனறிற்குப் போனான். 'உம் உம்' என்று ரீங் காரம் இட்டுக்கொணடு பறந்து பறந்து மலர்களில் உள்ள மகரந் தப்பொடியைத் தின்று கொண டிருந்தான். அந்த அழகான நீலவண்டை பூந்தோட்டக்கார னுடைய மகன பார்த்தான. 'அடே! என்ன அழகாக இந்த

வண்டு இருக்கிறது. நீல மாய்ப் பளபளப்பாய் இருக் கிறது. இதைப் பிடித்துக் கொண்டு பள்ளிக்கூடத்துககுப போவோம். அங்கு நணபர்க ளிடம் எல்லாம் காட்டுவோம' என்று நினைத்தான். உடனே

கைகுடடையை வீசிப் அதைப் பிடித்தான். காலி நெருப புக் குச்சிப் பெட்டியுள் போடடு மூடி எடுத்துககொண்டு பள ளிக்கூடம் போனான். அஙகு எல்லோருககும் காணபித்தான. ஒரு பையன் நீலவண்டின் பளபளக்கும் நிறத்தைப் பார்த துக் கைதட்டி மகிழநதான். இன்னொரு பையன் அதன சின்னஞ்சிறு சிறகை இப்ப டியும் அப்படியும அசைத்து அசைதது ஆராயந்தான. மற றொருவன் அதன் கால்களை இழுத்து நீட்டி முடக்கிப் பாரத் தான. வண்டாக இருந்த பாலு 'ஐயோ! வலிக்கிறதே!' எனறு கத தினான். அது யார் காதிலும் விழவில்லை. 'ஐயோ! அமமா!' என்று அழுதான். அந்தக கண்ணீர் யாருக்கும் தெரிய வில்லை. அவர்கள் தொல்லை கொடுத்து அதில் மகிழ்ந்தார் கள். 'ஐயோ நாம் எத்தனை வண்டுகளைப் பிடித்து வதைத் திருக்கிறோம். அவை எல்லாங் கூட இப்படித்தானே துனபப பட்டிருக்கும் என்று தான் செய் ததை எண்ணி வருந்தினான்.

கிளிக்குஞ்சாக இருநத சீனு தத்தி தத்திப் பறந்து இலுப் பைத் தோபபை அடைந்தான். வெறுமையால இருந்த ஒரு பொந்திற்குள் போய்ப் பதுங கிக் கொண்டான். ஆனால யாரோ ஒரு முரடடுச் சிறுவன் அந்த இலுப்பை மரத்தில் ஏறிப பொந்துக்களை எலலாம் பார்த் தான். கிளிக்குஞசாக இருந்த சீனுவைப பிடிதது விடடான் சீனு கையாலும மூககாலும குத்திப் பார்தநது; கொததிப பாரத்தது. அநத முரடடுப பையன் அதற்கு எலலாம பயப படவில்லை. பிடிதத பிடியை விடாமல் கீழே கொணடு போனான. அஙகு அவன தோழர் பலர் நின்று கொண் டிருந்தனர். அவர்கள் எல்லாம் ஆளுக்கு ஒருவராகக் கிளிக்குஞ் சின் கால்களை, சிறகுகளை, மூக்கைப் பிடித்து இழுத்து இழுத்து வேடிக்கை பார்த்த னர். சீனுவுக்கு ஒரே வலி யாக இருந்தது. தான் செய்த தவற்றை நினைத் துக் கொண்டான். 'ஐயோ! நாமும்கூட கோபு, பாலுவு டன் சேர்ந்துகொண்டு வண் ணத்துப்பூச்சி, வண்டு, பறவை களின் குஞ்சுகளுக்கு நிறைய தொல்லை கொடுத்தோமே. அப் போது அவை எலலாம் இப் படித்தாமே துன்பப்பட்டிருக்கும் என நினைத்து நினைத்து வருந்தினான். அப்படியே மயக் கம் வந்தது. அந்தச் சிறுவர்கள் கையில் மயங்கி விழுந்துவிட் டான்.

மீண்டும் வனத்தேவதை அவர் கள் கண்கள் முன் தோன்றிற்று. கோபு, பாலு, சீனு வாருங் கள். உங்களை மறுபடியும் பழையபடி மாற்றிவிடுகிறேன். இனிமேல் சின்னஞ்சிறு பறவை களுக்கு, வண்டுகளுககு எல்லாம் தொல்லை தரக்கூடாது. அவை தோட்டக்காரனுடைய நண்பர் கள். உங்களுக்குத் தோழர்கள். அவற்றின் அழகைப் பார்த்து மகிழுங்கள். இனிய குரலைக் கேட்டு மகிழுங்கள். அழகு அழ கான வண்ணங்களை, பல விதமான இனிய குரல்களை அவற்றிற்கு அளித்த கடவுளை நினைந்து நன்றி செலுத்துங் கள். அவறறிற்குத் துன்பம் செய்வது அவற்றைப் படைத்த கடவுளுக்கே துன்பம் செய்வது போல ஆகும் என்று சொல்லி மறைந்தது.

திடீர் என்று 'சுள்ளெனறு' உடம்பு சுட்டது. கோபு, பாலு, சீனு கணவிழித்தனர். பொழுது விடிந்து சூரியன எழுந்து எரிக்கத் துவஙகிவிட டது. பக்கதது கிராமததுக குக் கூத்துப் பார்க்க வந்தது நினைவுககு வந்தது. அவரகளு டைய தாத்தாககளும் எழுந்து மூவரையும எழுப்பி அழைத்துக கொண்டு தஙகள் மூத்தபபன பட்டிக்கு மீணடனர். வழியெல லாம தாங்கள் இரவில் வண ணததுப் பூச்சியாய, நீலவண டாய, கிளிக்குஞசாய் மாறி சிறு பிளளைகளிடம் பட்ட வேதனை களைக கோபு, பாலு, சீனு முவரும் தஙகளுககுள் பேசிக கொணடே வந்தனர். இனிமேல எந்தப் பறவைக்கும், வணடுக கும், வண்ணததுப் பூச்சிக்கும தொல்லை தருவதில்லை எனறு உறுதி செய்து கொணடனர.







# NAVAJEEVAN BLIND RELIEF CENTER (REGD.)

**(FREE H OME FOR THE BLIND AND AGED)**

2-21-A, SAPTHAGIRI ASHRAM, TIRUCHANOOR, TIRUPATI-517 503.

"எந்தரோ மஹானுபாவுலு - அந்தரிகி வந்தனமுலு"
வணக்கம்.

"எந்தரோ மஹானு பாவுலு" என்று பெரியோர்கள் கூறியபடி எத்தனையோ ஊர்-பெயர்-முகம் தெரியாத கருணை உள்ளம் கொண்ட ஆஸதீக அன்பர்கள், கடந்த 19 வருடங்களாக அளித்துவரும் ஆதரவின் காரணமாக திருப்பதி நவஜீவன் ஆச்ரமததில் சுமார 95 பார்வையற்ற குழந்தைகளும் ஆதரவற்ற முதியோர்களும் இலவசமாக உணவு, உடை, இருப்பிடம் மற்றும் கல்வி அறிவு பெற்று பயன் அடைந்து வருகிறுர்கள்.

மேலும் விரைவில் 50 படுக்கைகள் கொண்ட ஒரு இலவச கண் மருததுவமனையும் ஆஸதீக அன்பர்களின் உதவியுடன் நிர்மாணித்துள்ளோம்.

வேண்டுகிறோம் அன்பர்களின் உதவியை

திருப்பதி நவஜீவன் ஆசிரமத்தில் வசித்துவரும ஆதரவற்ற முதியோரகள் மறறும் பார்வை யற்ற குழந்தைகளுக்கு தினந்தோறும் மூன்றுவேளையும் தொடர்ந்து அன்னதானம் நடைபெறுகிறது. திருப்பதி புண்யஸ்தலத்தின் நவஜீவன் ஆச்ரமத்தில் அன்னதானம் வழங்க நாள் ஒன்றுக்கு சுமார் ரூ. 500/- செலவாகிறது.

ஆஸ்தீக அன்பர்கள் வருடத்தில் ஏதேனும ஒருநாளில (உங்களுடைய பிறந்தநாள், திருமண நாள் குழந்தைகளின் பிறந்தநாள், அல்லது முன்னோர்களின் திதிநாளில்) நவஜீவன் ஆசரமத்தின் பார்வையற்ற குழந்தைகளுக்கும், திக்கற்ற முதியோர்களுக்கும ரூ. 500/- காணிக்கையாக அனுப்பி ஒருநாள் அன்னதானம் வழங்க ஏற்பாடு செய்து ஸ்ரீவேங்கடேச பெருமாளின் அருளைப்பெற வேண்டுகிறோம்.

அன்னதானம் வழங்கும் அன்பர்களின் சார்பாக குறிப்பிட்ட நாளில் எங்கள் ஆச்ரம வளா கத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீஏழுமலையான் மற்றும் ஸ்ரீபத்மாவதி தாயாருக்கு கூட்டுப பிரார்த்தனை செய்வித்து பிரசாதத்துடன் விபரம் அனுப்பிவைக்கப்படும்.

நவஜீவனுக்கு அனுப்பி வைக்கப்படும் டொனேஷனுக்கு வருமான வரிச்சலுகை உண்டு. Contributions to Navajeevan Blind Relief Centre, Tirupati are exempted from Income Tax U/S 80 (G)

ஆஸ்தீக அன்பர்கள் தங்களது டொனேஷனை by Ch/DD/MO வாயிலாக NAVAJEEVAN BLIND RELIEF CENTRE என்கிற பெயரில் மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

"ஆதரவற்றவர்களுக்கு அளிக்கும் உதவிகளும் ஆண்டவனுக்கு செய்யும் தொணடாகும" ஸ்வாமி விவேகானந்தா.

தலைமை அலுவலகம் :
நவஜீவன் ஆச்ரமம்,
திருச்சானூர், திருப்பதி-517503.

நாராயண ஸேவையில்
K.S. ஆசார்யா
Founder / President

கிளைகள் :- பத்ராசலம் (ஆ.பி.) வாரணஸி (உ.பி.)

(தொடர் கட்டுரை)

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

## பை

பை - படம், பணம், அழகு, பரபபு
பைக்கொண்ட பாம்பு - பை-பரப்பு; படம் எடுத்த பாம்பு
பைங்கணணை - பசுத்த கண்ணையுடைய யானை
பைங்கணளி - நரஸிம்ஹம்
பைங்கூழ் - பசுமையையுடைய பயிர்கள்
பைங்கானம் - பரப்பையுடைத்தான கடற் கரைச்சோலை
பைங்கிளி - பச்சைக்கிளி; பசுத்த கிளி
பைங்கோதம் - அழகிய கடல்
பைத்த பாம்பு - விரித்த பணங்களையுடைய பாம்பு
பைசல், பைதல்- பிள்ளை; பைதல் கைசு, நோய் முக்கைசு;
பைதல் கைசு- நோய் முக்கைசு பைசல் என்று பிள்ளைக்குப் பெயர்; கையென்று ஒரு சிறுங்கைக்குப் பெயர்; நோய்-வியாதி; முக்கைசு-மூன்று சிறுங்கை; ஒரு சிருங்கைப்பிள்ளைக்கு மூன்று சிறுங்கை வியாதி என்றபடி; பைசல் கைசல் என்று மந்திரங்களிலே பயத்தை உண்டு பண்ணும் வார்த்தை சொல்லுதலுமாம்.
பைதல் - இளையது; பையல்
பைதல்காள் - குயிற்பிள்ளைகளே
பைந்தடம் - அழகிய குளம்
பைந்தலை - பரந்ததலை; வலிய தலை
பைந்தார் - பசுத்த மாலை
பைந்தாள் - பருத்த, பரந்த அடி
பைந்தினை - பசுமையான தினைப்பயிர்
பைந்தொடி - அழகிய முன்கைவளை. பசுமை; குளிர்ச்சி; அழகு; படம்-பாம்பின் பணம்
பைம்மை - அழகு; குளிர்ச்சி
பைம்புனல் - தெளிந்தநீர்
பைம்பூண் - அழகிய ஆபரணம்
பைய - மெள்ள; பொய்க்க
பையல - பையன்; நீசன
பைய்வே நிலை- பேகணித்து நின்ற நிலை; தரையில் கால்பரவாதபடி பொய்க்க அடியிட்டு நின்ற நிலை; தெரியாத படி பின்னே கால்வாங்கி நிற்கும் நிலை.
பையவே புயக்கற்றது - க்ரமத்திலே பசையற்றது; க்ரமத்திலே போகத். தொடங்கிற்று; கர்மத்திலே கைவிட்டது
பையாக்க - விழிக்க; பயத்தோடு கூடி யவனாக; அஞ்ச
பையாந்த - ஈடுபட்டு
பையாப்பு - அச்சக்குறி
பையுடைநாகம் - படம் விரித்த பாம்பு

## பொ

பொகடுதல் - போடுதல்; புகுகையும்
பொகட்ட - போட்ட
பொகடுசரக்கு - போடும் சரக்கு
பொங்க - சிலும்ப; நெரிக்க
பொங்கணை - ஓங்கின உயரமான படுக்கை
பொங்கொத்த பொங்கோ - வாத்யம் முழுங்கும் சபதோச்சாரணம்; தோற்றவர் தோல்வியாலே பறையடிக்க ஆடுவது ஒரு கூத்து; போரில் தோற்றவர் இடும் பயக்குரல்
பொங்கரவம் - பெரிய ஒலி
பொங்கரிமா - களித்து வருகிற குதிரை
பொங்காரரவம் - பெரிய கிளர்த்தியையுடைய திருவனந்தாழ்வான்
பொங்கிக்காட்டு- மழுகு நரசிம்மமாய் சீறிக்காட்டின அழகு
பொங்கிலங்கு புரிநூல் - மிகவும் விளங்குகிற பூணூல்
பொங்கிள வாடை - மிக மெல்லிய ஆடை; இளகிப்பதிக்கிற வாடை;
பொங்குகை - மிகுதி
பொங்கு மூவுலகம் - பரந்த மூவுலகம்
பொங்கு வித்தான் - கொழிக்கும்படி செய்தான்

பொங்குவீடு - மதகு; கலிங்கல்
பொங்கேழ் புகழ்கள் - பொங்கிக் கிளம்புகிற புகழ் கள்; பரந்து, கேழி-அழ கான, புகழ்கள்- கல்யாண குணங்கள்
பொசுக்கின - நெருப்பிலே வாட்டின
பொட்டத்துற்று - சடக்கென அமுது செய்து; போரத்துற்று
பொட்டப்போய் - சடக்கென; பொட்டெனப் போய்; விரைவாக; முழுவ துமாக

பொட்டு - வயிறு; புதர்
பொடிகை - நிந்திக்கை; வைகை
பொடி ஆடிய- தணல் - பொடி மூடினதணல்; நீறு பூத்த; மறைத்த நெருப்பு;
பொடியாடி - பஸ்மதாரியான சிவன்
பொடுக்கென - சடக்கென; சீக்கிரமாக
பொத்தவுரல் - விரிந்த உரல்; ஓட்டை உரல்; அடிபேர்ந்து பய னற்ற உரல்
பொத்தல் - துளைத்தல்
பொத - மறுபாடுருவும்படி; போம் படி; பொத்தலாம்படி; தேயும்படி; வெடிக்கும்படி; முள்ளுத்தைக்கை.
பொதளி - சமூகம்; செறிவு
பொதி - கட்டு; மூட்டை
பொதிசோறு - நிறைந்த சோறு; சோற்று மூட்டை; சோற்றுப்பொதி; பாக்குப்பாளையில் பொதித்த சோறு; கட்டின சோறு
பொதிந்து கொண்ட - நிறைந்த
பொதிய - கோட்டைகட்ட
பொதியறை - காற்றோட்டமில்லாத கீழறை; கொள்கலம்
பொதிவோம் - அடக்குவோம்; நிரப்பு வோம்
பொதுக்க - அடக்க
பொதுக்கோ - சடக்கென; பொதுக்கென
பொதுநாயகம் - எல்லாருக்கும் தலைவனாம் தன்மை, எல்லாவற்றையும் நிர்வகிக்கும் தன்மை-ஆக பாவித்து
பொதுநின்ற - பொதுவாக நின்ற
பொதும்பு - குழி; பெண்குறி; துவாரம்; பொந்து; சோலை
பொதுவிலே - பொதுவாக
பொதுவை - வை (இரண்டாம் வேற் றுமை-ஐ) பொதுவாக உள் ளது
பொதுளி - செறிந்து
பொந்து - சந்து; வளை

பொய்க்க அடி- யிட்டு - மெள்ள அடியிட்டு
பொய்யடியிட்டு - மெள்ள வஞ்சகமாக அடி யிட்டு; இயற்கையாயின் வேகம் இருக்கும்
பொய்க்குறித்து - பொய்யான குறிப்புச்சொல்லி
பொய்கை - குளம்
பொய்கைத் தடம் - குளக்கரை தடம்-கரை
பொய்கைப் பிரான் - பொய்கையாழ்வார்
பொய்ச்சரம் காட்டுதல் - பொய்யாக அஞ்சினவன் போல் நடித்தல்
பொய்ச்சூது - பொய்யான சூதாட்டம்
பொய்ச்சிலை குரல் - கபடமான கோபத்தை உடைய குரல். சிலை- கோபம்
பொய்த்தரவு - பொய்யோலை; பொய்ச் சீட்டு
பொய்ந்நம்பி - பொய்யால் குறைவற்று இருக்கிறவன்
பொய்ந்நிலம் - தரைகாணமுடியாத சேறு; பிரகிருதி
பொய்ந்நின்ற ஞானம் - விபரீத ஞானம்; பொய் யிலே நின்ற ஞானம்; அறி வற்ற தேகத்தில் ஆத்ம புத்தி
பொய்ந்நூல் - ஏமாற்றுபவராயும் அறிவில் தெளிவில்லாதவராயும் உள் ளவர்கள் தந்தாமுடைய புத்தியாலே வரைந்த சாஸ் திரம்
பொய்ம்மை - பொய்
பொய்ம்மொழி - பொய்யுரை
பெய்யகத்தேன் - வஞ்சகமான நெஞ்சை உடையேன்
பொய்யன் - தன்னை உள்ளபடி காட்டா தவன்
பொய்யில் பாடல் - பொய்யில்லாத சத்யமான பாடல்
பொய்யறை வாய் - வஞ்சகமாகச் செய்யப்பட்ட நிலவறை
பொய்யாநா - சத்தியவாதிகள் நாக்கு
பொய்யே கைம்மை - பெரும்பொய்; பொய்யும் கைம்மையும் ஒரே பொருள்
பொய்வல்லன் - பொய்யே சொல்லவல்ல வன்
பொரக்கணிசி யாத ஊர் - பொருகை-யுத்தம், அதற்குத் தகுதியால்லாத ஊர்
பொரலுற்று - பொருது; பெருகையி லுற்று
பொரி - அவல்பொரி; நெல்லுப் பொரி; அரசிப்பொரி என் பவை; பொரித்தது பொரி

| | | | |
|---|---|---|---|
| பொரிபுறம் தட-வுதல் | பொரிக்குப் புறத்தில், மேலே வெலலம் தடவி, வெல்லப் பொரி யாக்குதல்; ருசி இல்லாத பொருளில் மேலே வெல்லம் தடவி ருசி உண்டாக்குதல் | பொருகடல் கண் | - கயல்போல் மிளிரும் கண்; தன்னிலே பொருகின்ற கண்; ஒன்றுக்கொன்று உபமானமாவது ஒழிய வேறு உபமானமில்லாத கண்கள் |
| பொரிமுகந்து அட்ட | - நெற்பொரியை எடுத்துச் சேர்க்க | பொரு | - பொருத்தம்; ஒப்பு |
| பொருக்குதல் | - ஊகித்தல் | பொரு கரி | - யுத்தத்தைச் செய்யும் யானை |
| பொருகடல் | - தண்ணிலே தான் பொரக் கடவதான அலைகளையுடைய கடல்; பொருகிற கடல் | பொருகை | - யுத்தம் பண்ணுகை; செறிகை |
| பொருகணைகள் | - தொடுக்கிற போது அம்பாய், நெருப்பாய் எரிந்து கொண்டு தைக்கிற அம்புகள் | பொருகோட டோரேனம் | - பொரா நின்ற கோடு-கொம்பையுடைய பன்றி |
| | | பொரு சிறப்புள் | - பதரு நின்றுள்ள சிறகை உடைய பெரிய திருவடி |

(தொடரும்)

# நல்லோர் தரிசனம்

நல்லோர்களின் தரிசனம் பாவ விமோசனம் என்பது சான்றோர் வாக்கு. இதற்கு சான்றுகள் பல உள்ளன. கொடிய வேடனாக இருந்த வால்மீகி நாரதரின் தரிசனத்தால் மகரிஷி வால்மீகியானார். கொடியவன் அங்குலிமாலியன் புத்தரின் தரிசனத்தால் துறவு கொண்டு புத்தரின் சீடனானான். இராமகிருஷ்ண பரமஹம்சரின் தரிசனத்தால் நரேந்திரர் விவேகானந்தர் ஆனார். இப்படி பல சான்றுகள் கூறலாம்.

ஒரு சமயம் விவேகானந்தர் துறவு கொண்டு நாடுமுழுவதும் சுற்றுப்பயணம் மேற்கொண்ட போது பயணப்போக்கில் விவேகானந்தர் ஓர் துறவியை சந்திக்க நேர்ந்தது. அத்துறவியும், அவரும் பவஹரிபாபா என்பவரைப் பற்றி பேசிக்கொண்டனர். இடையில் விவேகானந்தரிடம் அத்துறவி தன் வாழ்க்கையின் முற்பகுதியை பற்றி கூறும்போது, நடந்த ஓர் நிகழ்ச்சியை கூறினார். பவஹரிபாபாவிடம் உள்ள உடமைகளை திருடன் ஒருவன் களவாடி செல்லும்போது பாபா அதைப் பார்த்துவிட்டார். திருடன் பயந்து அனைத்துப் பொருள்களையும் விட்டுவிட்டு ஓடலானான். பாபாவோ அந்த பொருள்களை எடுத்துக்கொண்டு அவன் பின்னால் ஓடலானார். நாராயணு இந்த பொருள்கள் யாவும் உன்னுடையதுதான், இந்தா! எடுத்துக்கொள் என்றார். ஆனால் அந்தத் திருடன் உடனே அவர் காலில் விழுந்து மன்னித்துவிடும்படி மன்றாடினான். அந்த திருடன் யாரோ அல்ல நான்தான் என்றார் அந்தத் துறவி விவேகானந்தரிடம். இதைக் கேட்ட விவேகானந்தர் பகவத்பாதர் ஆதிசங்கரரின் கீழ்கண்ட பாடலின் வரிகளை நினைவுகூர்ந்தார்.

"திரி ஜகதி சஜ்ஜன சங்கதி ரேகா பவதிபவார்வை தரனே நௌகா"

நல்லோரை ஓர்வினாடி தொடர்பு கொண்டாலும்போதும் பவசாகரத்தை நாம் எளிதில் கடந்து விடலாம்.

நல்லோரின் நல்லுறவினால் வைராக்கியம் ஏற்படும். வைராக்கியம் ஏற்படும்போது அவனிடம் உள்ள மோகம் விலகும், மோகம் விலகும்போது தெளிவு பெருகின்றான். தெளிவு பெற்றவன் வாழ்வில் முக்தியும் பெற வாய்ப்பு உண்டு.

"சத் ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்துவம்
நிர்மோஹத்வே நிச்சலத்துவம்
நிச்சலத்வே ஜீவன் முக்திஹி
பஜகோவிந்தம் பஜகோவிந்தம்"

என்ற நல்லோர் வழியை நாடுவோமாக.

தொகுப்பு : டி.டி. செல்வம் - ஏகாம்பரகுப்பம்.

# ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரங்கள்

திரு. பஞ்சு. அரங்கநாதன் - கீழ அரங்கம்.

## முன்னுரை :

ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத தின் முழுமுதல் பரம் பொருளான ஸ்ரீமந் நாராயணன் ஐந்து நிலைகளில் அடியார்க ளுக்கு அருள்புரிகின்றான். இவற் றில் பரம், வியூகம், விபவம், அந் தர்யாமி என்ற முதல் நான்கு நிலைகளை நாம் காண இய லாது.

அர்ச்சை எனப்படும் ஐந்தாம நிலையே ஆலயங்களில் நாம் காணும் அழகிய திருமேனி கள். இந்த ஆலயங்கள் பல வகைப்படும். தேவர்கள் சாபம் தீர வழிப்பட்டவை. முனிவர் கள் தவம் செய்து வணங்கி யவை. மன்னர்கள் கட்டியவை. பக்தர்கள் கூடி அமைத்தவை. ஆனால் இக்கட்டுரை ஸ்ரீமந்நா ராயணனே தானே மிக மிக விரும்பி உறைகின்ற "ஸ்வயம் வயக்த க்ஷேத்திரங்கள்" (தானே விரும்பித் தோன்றிய திருத்த லங்கள்) (Suyambu) பத்தைப் பற்றிய ஒரு சிறு பார்வையாக அமைகிறது.

## பரநிலை :

பரமபதத்திலே ஸ்ரீதேவி, பூதேவி, நீலாதேவி புடைசூழ அனந்தன், கருடன், சேனை முதலி சேவை செய்ய மூலப் பரம்பொருளாக வீற்றிருக்கும் நிலையே பரம் எனப்படும்.

## வியூகம் :

தேவர்கள் வணங்கி குறைகள் கூறிச் செல்லவும், மண்மிசை யில் பிறந்திட வாய்ப்பாகவும் திருப்பாற்கடலில் அலையிலே அறிதுயில் செயயும் நிலை வியூகம் ஆகும்.

## விபவம் :

மச்சம் தொடங்கிய தச அவ தாரங்கள் துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனம் செய்வதற்கு ஏற்பட்டது. அவதார நிலை விபவம் ஆகும்.

## அந்தர்யாமி :

எல்லாப்பொருளிலும் ஸ்ரீமந் நாராயணனே மறைந்து உறை யும் நிலை அந்தர்யாமித்துவம் ஆகும். "திடவிசும்பு, எரி வளி, நீர், நிலம் இவை மிசை படர் பொருள் முழுவதுமாய் அவை தொறும் உடல்மிசை உயிர் எனச் சுரந்து எங்கும் பரந்துளன்" என்றார் நம்மாழ் வார்.

## பயன்படாநிலை :

ஆனால் ஆன்ம தாகம உடைய பக்தன் முதல் நான்கு நிலைகளால் பயன்ப டுவதில்லை. எப்படி? ஒருவ னுக்கு அதிக தண்ணீர் தாகம். அவனுக்கு பூமிக்கு அடியிலே உள்ள தண்ணீரும், பூமிககு மேலே வான் மேகத்தண்ணீரும தாகம் தீர்க்காது. அதுபோ லவே பரமபதத்து பரநிலை யும். அண்டம் முழுதும் பரவி யுள்ள சமுதரஜலம் தாகம் தீரக காது போலே திருப்பாற்கடல வியூக நிலையும் பயன் தராது. முன்பு பருவகாலங்களில் பெய்த மழைநீர் இப்போதைய தாகம் தணிக்காதது போல முன் யுகங் களில் தோன்றிய ராம, கிருஷ் ணாதி அவதாரங்கள் இன்று பயன்தராது.

## பின்னானார் வணங்கும் சோதி :

ஆறு, குளம், ஏரி, கிணறு, தொட்டிகளில் சேமிக்கப்பட்டி ருக்கும் தண்ணீர் மட்டுமே உட னடி தாகவிடாய் தணிக்குமாறு போல ஆலயங்களிலே அமைக் கப்பட்டிருக்கும் அர்ச்சாவ தார திருமேனிகளே ஆன்மதா கம் கொண்ட பக்தனுக்கு உடன டியாக உத்வி செய்யும். இத்த கைய ஆயிரக்கணக்கான ஆல யங்களிலும் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட 108 ஸ்ரீவைஷ்ணவ திவ்ய தேசங்கள் மிகவும் சிறந்தவை. ஆழ்வார்களின் அமுதத்தமிழ் கேட்க பழமறைகள் முறையிட பைந்தமிழ்ப் பின் சென்ற பச் சைப் பசும் கொண்டல் அங்கே இருப்பது கண்கூடு.

## ஸ்வயம் வ்யக்த சேத்திரங்கள் :

"ஆத்யம் ரங்கமிதி ப்ரோக்தம்
விமானம் ரங்க சம்ஜ்ஞகம்
ஸ்ரீமுஷ்ணம், வேங்கடாத்ரிச்ச
சாலக்ராமஞ்ச நைமிசம் ।
தோதாத்ரி புஷ்கரஞ்சைவ
நரநாராயணாச்ரமம்
அஷ்டௌமே மூர்த்தயஸ் சந்தி
ஸ்வயம்வ்யக்தா: மகிதலே ॥

## சுயம்பு மூர்த்திகள் :

108 ஸ்ரீவைஷ்ணவ திவய தேசங்களிலும் ஸ்ரீமந்நாராய

ணன் தானே மிக விருமபி உறையும் எட்டு தேசங்கள் "ஸ்வ யம் வ்யக்தி" அதாவது தானே தோன்றியவை சுயமபு மூர்த் திகள் எனப்படுகின்றன. மேலே உள்ள சமஸ்கிருத சுலோகத் தின்படி ஸ்ரீரங்கம், ஸ்ரீமுஷ் ணம, திருவேங்கடம், சாளககிரா மம், நைமிசாரண்யம், வானமா மலை, புஷகரம, பதரிகாஸரமம ஆகிய எட்டும் ஸ்வயம் வயகத க்ஷேத்திரங்கள் எனறுபோற்றப படுகிறது. இதைத்தவிர ஈஸ்வர ஸம்ஹிதை என்ற நூலில காஞ்சிபுரமும், திருநாராயணபுரமும் வ்ஸவம வ்யக்தம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆக மொத்தம் பத்து க்ஷேத்திரங்கள் உள்ளன.

## 1. ஸ்ரீரங்கம் :

ஸ்ரீவைஷ்ணவததில் "கோயில்" எனறால ஸ்ரீரஙகத தையே குறிககும். மதுரகவி தவிர மற்ற பதினாறு ஆழ்வார கள், ஸ்ரீராமானுஜர், ஸ்ரீஆள வந்தார், ஆழ்வான, ஆண டான், எம்பார், பட்டர், பிளளை லோகாசாரியார் மற்றும் பலர் மங்களாசாசனம செய்துளளனர. 247 பாசுரங்கள் உள்ளன. கம பராமாயணம் அரங்கேறியது.

இக்ஷ்வாகு குலதனம் ஸ்ரீரஙக நாதர். ஸ்ரீராமனால் பட்டா பிஷேகம் முடிந்தபின் விபிஷ ணனுக்கு பரிசாகத் தரப்பட டது. இயற்கை அழகுடன இரண்டு ஆறுகளுக்கு இடை யில அமைநத ஸ்ரீரங்கததில பகவான் தானே மிக விருமபி தங்கியமையால் முதல ஸவயம வியகத க்ஷேத்திரமாக ஸ்ரீரஙகம போற்றப்படுகிறது. ஸ்ரீரஙகநா தன் விபிஷணனுக்கு சேவை சாதிக்குமபடியாக தெறகே திரு முகம கொண்டு அரவு அணை யில துயிலகிறார.

"குடதிசை முடியைவைத்து,
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பினபு காட்டி தென்திசை
இலங்கை நோக்கி
கடல்நிறக்கடவுள் எந்தை அரவு
அணைத்துயிலுமாகண்டு
உடல் எனக்கு உருகுமாலோ
என்செய்கேன் உலகத்தீரே?"
திருமாலை-பாடல் 19

## 2. ஸ்ரீமுஷ்ணம் :

இரணடாவது ஸ்வயம் வ்யக்த ஸ்தலம். ஸ்ரீமந் நாராயணன் வராக அவதா ரம் எடுத்து இரண்யாட்சனை அழித்து பூமாதேவிக்கு அருள் செய்த தலம். பூவராக க்ஷேத்தி ரம் எனப்படுகிறது. பகவான் தெற்கே திருமுகம் கொண்ட நின்ற திருக்கோலம் வராக வடி வில் பூமிப்பிராட்டியுடன் காட்சி தருவது மிக அழகு. சிதம்பரம் என்ற பிரபல சைவ தலததில இருந்து 45 மைல் தொலைவில் உளளது.

முஸ்லிம் பிரபுவின் நோயைத் தீர்த்து முஸ்லிம்களின் அன் பைப் பெற்றவர். இன்றும் மாசி மகத்திற்கு பெருமாள் சமுத்திரம் எழுந்தருளும் போது "கிள்ளை" என்ற கிராம முஸ லிம்கள் அன்புடன் உபயம் செய்வது கண்கூடு. ஸ்ரீமுஷ் ணம் ஆழ்வார்களால் மஙகளா சாசனம் செய்யப்படவில்லை.

"அவர் அவர் தாம் தாம்
அறிந்தவாறு ஏத்தி
இவர் இவர் எம்பெருமான் என்று
சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்தும் தொழுவர்
உலகு அளந்த
மூர்த்தி உருவே முதல்"
முதல் திருஅந்தாதி பாடல்-14

## 3. திருவேங்கடம் :

மூன்றாவது ஸ்வயம் வ்யக்த ஸ்தலம் வைஷ்ணவ மரபிலே ஸ்ரீரங்கத்திற்கு அடுத்த இடத் தைப் பெறுகிறது. பொய்கை யார், பூதத்தார், பேயார், குளசே கரர், திருப்பாணர், திருமங்கை யார், திருமழிசையார், ஆண் டாள், பெரியாழ்வார், நம்மாழ் வார் ஆகிய பத்து ஆழ்வார்க ளும் 202 பாசுரங்களால் மங்க ளாசாசனம் செய்துள்ளனர். பக்



தர்களின் காணிக்கையால் உல கிலே இரண்டாவதும், இந்தியா விலே முதல் இடமும் பெறும பணககாரக் கோவில், ஸ்ரீமநநா ராயணனுடன் ஊடல்கொணட பிராட்டியார் இங்கு அரச குமாரியாகப் பிறகக அவனை மணம செயவதற்காக திருமால் இங்கு வந்து நிரந்தரமாக எழுநதருளியுள்ளான். சேஷாத்ரி, கருடாத்ரி, வ்ருஷபாத்ரி, அஞ்ச னாதரி, வெங்கடாத்ரி, நாராய ணாதரி, சிம்மாத்ரி என்ற ஏழு மலைகளின் மீது ஆனந்த விமான நிலையத்தில் கிழக்கே திருமுகம் கொண்ட நின்ற திருக் கோலம். ஸ்ரீநிவாசன், பாலாஜி, வெங்கடாசலபதி எனப் பல திரு நாமங்கள். ஆதிவராக க்ஷேத்தி ரம.

"செடியாய வல்வினைகள்
தீர்க்கும் திருமாலே
நெடியானே! வேங்கடவா!
நின் கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும்
கிடந்து இயங்கும்
படியாய்க் கிடந்து உன்
பவளவாய் காண்பேனே"
பெருமாள் திருமொழி -39

## 4. சாளக்கிராமம் :

நான்காவது ஸவயம் வயக்த ஸதலம் நேபாளநாட்டுத் தலை நகர் காட்மாண்டில் இருநது முக்திநாத் செல்லும் வழியில் கண்டகி நதிக்கரையில் இமய மலைச்சாரலில் உள்ளது. பெரியாழ்வார், திருமங்கையார, ஸ்ரீராமானுஜர் மங்களாசாசனம் செய்த திவ்யதேசம். 12 பாசு ரங்கள உள்ளது. வடக்கே திரு முகம் கொண்ட நினற திருக கோலம். ஸ்ரீமூர்த்தி என்ற திரு நாமம்.

"உலவு திரையும், குலவரையும்,
ஊழிமுதலா எண்திக்கும்
நிலவும் சுடரும் இருளுமாய்
நின்ருன்! வென்றி விறலாழி
வலவன் வானோர் தம்பெருமான்
மருவா அரக்கர்க்கு எஞ்ஞான்றும்
சலவன் சலம் சூழ்ந்து அழகாய
சாளக்கிராமம் அடை நெஞ்சே"
பெரிய திருமொழி (1.5.3)

## 5. நைமிசாரண்யம் :

ஐந்தாவது ஸ்வயம் வ்யக்த ஸ்தலம். கல்கத்தா. டேரா டூன் ரயில் பாதையில் பால மாவ் ஜங்ஷனில் இருந்து பத்து மைல் உள்ளது. பகவான் இங்கு ஆரண்ய வடிவில் உள்ள தால் காட்டையே வழிபடுவது மரபு. 18 புராணங்கள், மகா பாரதம், ஸ்ரீமத் பாகவதம் ஆகிய புனித நூல்கள் தோன் றிய இடம். வேதவியாசருக்கு தனி ஆலயம் உள்ளது. பக வான் தேவராஜன் என்ற திருநா மம் கொண்டு கிழக்கே நோக்கி நின்ற வடிவம். திருமங்கை ஆழ்வார் பத்து பாசுரங்களால் மங்களாசாசனம் செய்த ஸ்தலம்.

ஊன்இடைச்சுவர் வைத்து
என்புதூண் நாட்டி உரோமம்
வேய்ந்து ஒன்பது வாசல்
தான் உடைக்குரம்பை பிரியும்போது
உன்தன் சரணமே சரணம்
என்று இருந்தேன்
தேன்உடைக்கமலத்திருவினுக்கு
அரசே! திரைகொள்
மாநெடுங்கடல் கிடந்தாய்
நான் உடைத்தவத்தால் திருவடி
அடைந்தேன் நைமிசாரண்யத்துள்
எந்தாய்
பெரிய திருமொழி (1.6.9)

## 6. வானமாமலை :

ஆறுவது ஸ்வயம் வ்யக்த ஸ்தலம். திருநெல்வேலியில் இருந்து நாகர்கோவில் செல் லும் சாலையில் 30 கி.மீ. தொலைவில் உள்ளது. பக வான் மது, கைடபன ஆகிய அசுரர்களை அழித்தபோது பூமி தேவி தன்தூய்மையை இழந்து இங்கு தவம் செய்து மாசு நீங் கினாள். ஸ்ரீவைகுந்தம் போல இங்கும ஸ்ரீதேவி, பூதேவி சூழ கிழககு நோக்கி வீற்றிருககும் வடிவம். திருநாமம் தெய்வநா யகன் பெருமாளுக்கு தினமும் தைல அபிஷேகம். இந்த தைலம் பலநோய்கள் போககு வது உண்மை. வானமாமலை மடம் உள்ளது. ஸ்ரீமண வாள மாமுனிகளால் ஸ்தாபிக் கப்பட்ட மடம். நம்மாழ்வார் 11 பாசுரங்களால் மங்களாசாசனம் செயதுள்ளார்.

"நோற்றநோன்பிலேன் நுண்-
அறிவிலேன் ஆகிலும் இனி
உன்னை விட்டு ஒன்றும்
ஆற்றகிற்கின்றிலேன் அரவின்
அணை அம்மானே!
சேற்றுத்தாமரை செந்நெல்
ஊடுமலர் சிரீவரமங்கலநகர்
வீற்றிருந்த எந்தாய்! உனக்கு
மிகை அல்லேன் அங்கே"
(நம்மாழ்வார் திருவாய்மொழி 5-7-1)

## 7. புஷ்கரம் :

ஏழாவது ஸவயம் வ்யக்த ஸ்தலம். டில்லி பம்பாய் ரயில் பாதையில் ஆஜ்மீரில் இருந்து 20 மைல் தொலைவு உள் ளது. இங்கு பகவான் தீர்த்த வடிவில் உள்ளார். எனவே நதியையே வணங்குவது ஐதீ கம. தாமரைப்பூ விழுந் ததனால் பிரம்மா 'புஷ்கரம்' என்று பெயரிட்டதாக வர லாறு. பிரம்மாவிற்கு தனிக்கோ யில் பகவான் கிழக்கே திரு முகம் கொண்டு வீற்றிருந்த திருக்கோலத்தில் "பரம புரு ஷன்" என்ற திருநாமம கொணடு காட்சி தருகிறுர். மங்களா சாசனம் செய்யப்படவில்லை. புராண ஸ்தலமாகக் கருதப்ப டுகிறது.

## 8. பதரிகாச்ரமம் :

எட்டாவது ஸ்வயம் வ்யக்த ஸ்தலம். திருஅஷ்டாக்ஷர மந்திரம் அவதார ஸ்தலம். பகவான் தானே நாராயணனாகவும், நரனாகவும் அவதரித்து இங்கு பதரி (இலந்தை) மரத்தடியில் நாராயணன் நரனுக்கு திருஅஷ்டாக்ஷர மந்திரம் உபதேசித்த பெருமை உடையது. கோவிலின் வடக்கே உள்ள பிரம்ம கபாலத்தில் பித்ரு காரியம் செய்வது மிக விஷேஷம் ஆகும்.

ரிஷிகேசத்தில் இருந்து 187 மைல் தொலைவு. பனி மலை. ஐப்பசி முதல் சித்திரை வரை ஆறு மாதம் கடும்பனியால் கோவில் மூடப்படும். சித்ரா பவுர்ணமி திறக்கப்படும். பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் செய்த திவ்ய தேசம். பகவான் தப்த காஞ்சன விமானத்தின் கீழ் கிழக்கே திருமுகம் கொண்டு வீற்றிருந்த திருக்கோலத்தில் பத்ரிநாராயணன் என்ற திருநாமம் கொண்டு அருள் பாலிக்கிறான்.

"துணிவு இனி உனக்குச்
சொல்லுவன்
மனமே! தொழுது எழு!
தொண்டர்கள் தமக்குப்
பிணி ஒழித்து அமரர் பெரு விசும்பு
அருளும் பேர் அருளாளன்
எம்பெருமான்
அணிமலர்க்குழலார் அரம்பையர்
துகிலும், ஆரமும் வாரிவந்து
அணிநீர்
மணிகொழித்து இழிந்த கங்கையின்
கரைமேல் வதரி
ஆச்ரமத்துள்ளானே!"
(திருமங்கை ஆழ்வார்
பெரிய திருமொழி 1.4.4)

## 9. திருக்காஞ்சிபுரம் :

மேலே விவரிக்கப்பட்ட எட்டு ஸ்தலங்களே ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரங்கள் ஆகும். இவை தவிர ஈஸ்வர ஸம்ஹிதை என்ற நூலில் காஞ்சியும், திருநாராயணபுரமும் ஸ்வயம் வ்யக்தம் எனப்படுகிறது. ஆகவே அவை பற்றியும் காண்போம். காஞ்சிபுரம் வைஷ்ணவ திவ்ய தேசங்கள் வரிசையில் மூன்றும இடம் பெறுகிறது. [1. திருஅரங்கம் 2. திருவேங்கடம்] சென்னைககு மேற்கே 75 கி.மீ. தொலைவில் உள்ளது. பொய்கை ஆழ்வார். ஸ்ரீஸ்வாமி தேசிகன் அவதார ஸ்தலம். திருமங்கை ஆழ்வார், பூதத்து ஆழ்வார், பேயாழ்வார், ஆளவந்தார், ஸ்ரீராமானுஜர் மங்களாசாசனம் செய்த ஸ்தலம். வைணவம் பல வழிகளில் வளர்ககப்பட்ட "விஷ்ணு காஞ்சி" பிரம்மா இங்கு யாகம் செய்து பல வரம் பெற்றுர். வரம் தந்தவன் வரதராஜன் என்ற திருநாமம் பெற்றுன். அயோத்தி அரசன் சகரன் மகன் அஸமஞ்சனும், மனைவியும் சாபத்தால் பல்லி ஆயினர். உபமன்யு முனிவர் வழிகாட்டி வரதராஜன் அருளால் சாபம் நீங்கினர். இன்று பல்லிகளின் சரீரம் வரதன் சன்னிதியில் உள்ளது ஐராவதம் என்ற இந்திரன் யானை மலையுருவில் வரதனை தாங்குவதாக ஐதீகம். புண்யகோடி விமானத்தின் கீழ் மேற்கே திருமுகம் கொண்டு நின்ற கோலத்தில் பகவான் காட்சி தருகிறுர்.

"என் நெஞ்சம் மேயான்,
என் சென்னியான், தானவனை
வல்நெஞ்சம் கீண்ட மணி
வண்ணன், முன்னம் சேய்
ஊழியான், ஊழிபெயர்த்தான்,
உலகு ஏத்தும்
ஆழியான் அத்தியூரான்"
(பூதத்தாழ்வார்-இரண்டாம்
திருஅந்தாதி-95)

## 10. திருநாராயணபுரம் :

பத்தாவது ஸ்வயம் வ்யக்த ஸ்தலம் பெங்களூர் - மைசூர் ரயில்பாதையில் பாண்டவபுரம் நிலையத்தில் இருந்து 20 கி.மீ. தொலைவு உள்ளது. சாண்டியல்ய மகரிஷிக்கு பகவான் பத்ரிநாராயணராக காட்சி தந்தார். எனவே தட்சிண பதரிகாஸ்ரமம் எனப்படுகிறது. அழிந்து விட்ட கோயில் மூலவர், உற்சவரை கண்டுபடித்து மீண்டும் பிரதிஷ்டை செய்தார் ஸ்ரீராமானுஜர். பகவான் மேற்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் நாராயணன் என்ற பெயருடன் விளங்குகிறுர்.

## முடிவுரை :

ஸ்ரீமந்நாராயணன் தானே மிகவும் விரும்பி தங்கிய "ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரங்கள்" பத்தும் பற்றி சிறிது கண்டோம். பாகவதர்கள் இப்பத்து ஸ்வயம் வ்யக்த ஸ்தலங்களையும் சேவித்து சகல சௌபாக்யங்கள் பெற்றிட ஸ்ரீமநநாராயணன் அருள் செய்ய பிராத்திக்கிறோம்.

ஸ்ரீநாராயண ஸ்மிருதி.





(தொடர் கட்டுரை)

# ஸ்ரீ ராமாநுஜர்

திரு. மா. சீதாராமன் - காஞ்சிபுரம்.

## உடையவரும் கூரத்தாழ்வாரும்

கூரத்தாழ்வாரின் நினைவாற்றலால்தான் உடையவர் ஸ்ரீ பாஷ்யம் எழுத முடிந்தது. பிரும்ம சூத்திர விருத்தியுரையில் தவறு ஏற்படாவண்ணம் கூரத்தாழ்வார் தம் புலமை நலத்தால் உடையவருக்கு உறுதுணையாக இருந்து வந்தார். உடையவர் வாயிலாக ஸ்ரீபாஷ்யம் வெளிவந்ததற்குக் கூரத்தாழ்வாரே முற்றிலும் துணைநின்ருர் எனல் சாலும்!

மேலும் வேதாந்த தீபம், வேதாந்த சாரம், வேதார்த்த சங்கிரகம், கீதாபாஷ்யம் எனப்படும் நான்கு நூல்களையும் இராமாநுசர் இயற்றியருளினார். சரணுகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம், வைகுண்ட கத்யம் என்னும் க்ரந்தங்களையும் இயற்றி அளித்தார்.

ஆளவந்தாரின் திருவுள்ளக் குறையாக இருந்தவற்றுள் முதலாவதான குறையைத் திவ்யப்ரபந்தத்தைத் 'திராவிட வேதம்' என்னும் பெயரால் உலகறியச் செய்து அதனை வடமொழி வேதத்துக்கு ஒப்பானது என்று நிறுவியதன் மூலம் போக்கியருளினார். பிரும்ம சூத்திரத்துககு ஸ்ரீபாஷ்யம் எழுதி முடித்ததன் மூலம் ஆளவந்தாரின் இரண்டாவது விருப்பத்தையும் பூர்த்தி செய்தார்.

பின்னர், இராமாநுசர் 74 சிம்மாசனாபதிகளுடனும், மற்றும் எண்ணற்ற சீடர்களுடனும் யாத்திரையாகப் புறப்பட்டார.

கும்பகோணம், மதுரைமாநகர், நம்மாழுவாரின் அவதாரஸ்தலமாகிய திருக்குருகூர், திருக்குறுங்குடிமுதலான தலங்கள் பலவற்றுக்கும் சென்று அங்குள்ள மூர்த்தங்களை வழி



பட்டார். வைணவக் கொள்கைகளைத் தம் வாதத்திறமையால் பல இடங்களிலும் பரப்பினார.

இராமாநுசரின் செயல்களினால் பெரிதும் மகிழ்வுறற திருமால் தாமே அவரிடம்வந்து "வைணவநம்பி" என்னும் திருப்பெயரைத் தந்தார். அதனால் பெருமையும் அடைந்தார்.

தமிழக எல்லையைக் கடநது கேரள நாட்டிலுள்ள திருவனந்தபுரம் சென்று அங்கே எழுந்தருளியுள்ள அனநதபத்மநாப சுவாமியைத் தரிசித்து ஆனந்தம் கொண்டார். அங்கிருந்தும் வடக்கு நோக்கிப் பயணமானார். துவாரகை, மதுரை, பிருந்தாவனம், சாளக்கிராமம், சாகேதம், பதரிநாத், நைமிசாரண்யம், புஷ்கரம் முதலான திவ்ய தலங்களுக்குச் சென்று அங்கங்கே எழுநதருளியுள்ள மூர்த்தங்களை வழிபட்டு மகிழ்நதார். பின்னர், காஷ்மீரம் சென்று அங்கிருக்கும் சாரதா பீடத்தைக் கண்டு வணங்கி நின்ருர். "கப்யாஸம் புண்டரீகாக்ஷம்" என்பதன் பொருட் சிறப்பை இராமாநுசர் விளக்கக் கேட்டுக் கலைவாணியே மிகவும் களித்து இராமாநுசருககு "ஸ்ரீபாஷ்யகாரர்" என்னும் விருதளித்து அருள் புரிந்தார்.

காஷ்மீர மன்னரும், பண்டிதர்களும் இராமாநுசரின் புலமை நலத்திற்கு முன்நிற்கமாட்டாது, அவருக்குச் சீடராயினர். சாரதாதேவியின் அருளைப் பெற்று இராமாநுசர் காசியை அடைந்து அங்குத் தம் சித்தாந்தத்தைப் பரப்பினார்.

காசியிலிருந்தும் புறப்பட்ட இராமாநுசர் 'புருஷோத்தமபுரி' எனப்படும் ஜகந்நாதம் வந்தடைந்து அங்கே சில காலம் தங்கினார்., திருப்பெயரால் மடம் ஒன்றையும் அங்கே நிறுவினார். சிம்மாசலம், அஹோபிலம் முதலான தலங்களைத் தரிசித்து விட்டுத் திருப்பதிவந்து சேர்ந்தார்.

அப்போது, திருவேங்கடத்துப் பிரானைப் பற்றிச் சைவர்களுக்கும் வைணவர்களுக்கும் பெரிய அளவில் வாக்

குவாதம் நடைபெற்றுக்கொண் டிருந்தது. திருமலையில் எழுந்தருளியிருக்கும் பெருமான் சிவனே என்று சைவரும், திரு மாலே என்று வைணவரும் வாதம் புரிந்து கொண்டிருந்த னர். இதற்கொரு முடிவுகாண இராமாநுசர் முயற்சி செய்தார். அதற்கென யோசனை ஒன்றை யும் வெளியிட்டார்.

திருவேங்கடவன் திருமுன்பு திருமாலுக்குரிய சங்கு சக கரங்களையும், சிவபிரானுக்கு ரிய சூலம் முதலியவற்றை யும் வைப்பதென்றும் இரவு திருக்கதவம் பூட்டப்படவேண் டும் என்றும் யோசனை கூறி னார். இறைவன் எவற்றைத் தரித்துக் காட்சி அளிக்கிறுனோ அதன்படியே இருசாரரும் ஒப்புக் கொள்வது என்னும் முடிவுக்கு வந்தனர்.

மறுநாள் காலை சுப்ர பாத சேவைக்காகத் திருக்கதவம் திறக்கப்பட்டது. சங்கு சக்க ரங்களைத் தரித்தவராயத திரு வேங்கடவன் காட்சி தநதார. திருவேங்கடத்தில் நடைபெறற இவ்வற்புத செயலைக் கேள்வி யுற்றோர் பாஷ்யகாரரைப் பெரி தும் பாராட்டினர்.

இவ்வாறு வடக்கே காஷ்மீ ரம் முதல் தெறகே திருவேங கடம் வரை அறபுதங்கள் பல வற்றை நிகழ்ததிவிட்டுத் திருவ ரங்கம் வந்தடைந்தார் இராமா நுசர்.

உடையவருக்கும் கூரத்தாழ் வாருக்கும இருந்த தொடர்பு எல் லாராலும் பின்பற்றததகுநத ஒனறு. எனவே, கூரததாழ் வார வரலாறறினைச் சுருஙககக காணபோம.

காஞ்சிபுரததுக்கு வடககே சுமார் 10 கி.மீ. தூரததில் உள்ளது கூரம் என்னும் தலம. இங்குதான் கூரேசர் அவதரித் தார. பெருதத செல்வக்குடி யில் பிறந்த இவர் ஆண்டாள் என்னும் பெயருடைய மாதர சியை மணந்தார். தம் செல் வத்தையெல்லாம் ஏழை மக் களுக்கென்றே செலவிடுவந் தார். வியக்கத்தக்க நினை வாற்றல மிக்க இவர் உடை யவரிடம் சிறுபிராயந்தொட்டே பக்தி செலுத்திவந்தார். கூரேச ரின் துணைகொண்டே உடை யவர் யாதவப்ரகாசரைச் சாஸ்த் திர அர்த்த வாதத்தில் வெற்றி பெற்ருர்.

கூரேசரின் ஈகைத் தனமையை உணர்ந்து இலட்சுமிதேவியே வியப்படைநததாகக் கூறு வதுண்டு. ஒருநாள் நடு நிசியில் கதவை மூடுவதால ஏற்பட்ட பெருஞ்சத்தத்தைக் கேட்டு இலக்குமிதேவி திடுக் கிட்டாராம். இதன் விபரத்தைத் திருக்கச்சிநம்பிகளிடம் கேட்டா ராம். கூரேசரின் இரக்கவுணர்வு, ஈகைத்தன்மை பற்றி விளக்க மாகத் திருக்கச்சி நம்பிகள் எடுத் துக்கூறினாராம். காலைமுதல் இரவு வரை ஏழை எளியோர் பலருக்கும் உண்டியும் உடை யும் கொடுத்துவிட்டு இரவில் ஓய்வெடுப்பதற்காகக கதவை மூடும் சப்தமே இவ்வளவு தூரம் கேட்கிறது என்று கூறினாராம். அத்தகைய ஈகையாளரைத் தாம் காண அழைத்து வருமாறு இலட்சுமிதேவி கேட்டுக்கொண் டாராம்.

இலட்சுமிதேவியின் அருளா ணைப்படித் திருக்கச்சி நம்பிகள் கூரேசரை அணுகினார். திருவ ரங்கத்துக்கு எழுந்தருளி இலட் சுமி தேவியைக் கண்டு ஆசிபெ றுமாறு வேண்டிக்கொண்டார். இதுகேட்டுக் கூரேசர் வியப்பும் அதிர்ச்சியும் அடைந்தார். சாதா ரண மனிதப்பிறவி கொண்ட தம்மைத் தேவியே அருளபுரிய அழைப்பது தாம் செய்த தவமே என்று மகிழ்ந்தார்.

செல்வத்துக்குகதிபதியாகிய இலட்சுமிதேவியைக் காணச் செல்லும் போது செல் வச் செருக்குடன் செல் லுதல் கூடாது என்பதற்கா கத் தம் செல்வம் அனைத்தை யும் துறந்துவிட்டதுடன் தாம் அணிந்திருந்த அணிகலன்களை யும் பட்டுப் பீதாம்பரத்தையும் களைந்து எறிந்துவிட்டு எளிய உடையுடன் புறப்பட்டார்.

தன் கணவர் புறப்பட்டத றிந்து அவர்தம் பத்தினியார் ஆண்டாளும் புறப்பட்டார். தன் னுடன் பொன்வட்டில் ஒன் றையும் எடுத்துச் சென்ருர். கொஞ்ச தூரம் நடந்து சென் றதும் காடு ஒன்று வந்தது. இருட்டிவிட்டதால் ஆண்டாள் அம்மையார் நெஞ்சம் படப டத்தது.

"மடியில் கனமிருநதால்தானே வழியில் பயம் கொள்ள வேண் டும்! உனக்கேன் அச்சமேற்படு கிறது!" என்று கூரேசர் தம் பத்தினியைக் கேட்டார். அம் மையார் உடனே தம் மடியில இருந்த பொன்வட்டிலை வீசி எறிந்தார். அவ்வளவில அவரிட மிருநத அச்சமும் அறியாமையும் ஒருங்கே அகன்றன.

இரண்டாம் நாள் திருவரங் கம் வந்து சேரந்த கூரேசரையும் அவர் தம் பத்தினியாரையும் இராமாநுசர் அன்புடன் உபச ரித்து, தங்குதற்கென்று இடம ஒன்றையும் அளித்தார். செல வக்களிப்பில் வாழ்ந்த கூரே சர் பிட்சை கொண்டே தம் வாழ்வை நடததினார். நலல

நூல்களைப் படிப்பதிலும், குருவுக்குப் பணிவிடை புரிவதிலும் தம் காலத்தைப் பயன்படுத்திக் கொண்டார். ஆண்டாள் தம் பதிக்குச் சேவை செய்வதையே பாக்கியமாகக் கொண்டு அவர் உண்டு மிகுந்த உணவை உண்டே மகிழ்ந்து வந்தார்.

ஒருநாள் அதிசயம் ஒன்று நடைபெற்றது. அடைமழை பெய்த ஒருநாள் உணவுக்கு வெளியே செல்லாமையால் கூரேசர் பட்டினியாகவே கிடந்தார். பதியின் பட்டினியைப் பொறுக்கமாட்டாமல், ஆண்டாள் திருவரங்கப் பெருமாளை மனத்துள் நினைந்தார். திருவரங்கன் திருவருளால் கோவில் பரிசாரகர் சிலர் அறுசுவை உண்டியைக் கொண்டு வந்து கூரேசர் வீட்டில் வைத்துவிட்டுச் சென்றனர். இந்த மகா பிரசாதத்தை வந்தனை செலுத்திச் சதிபதிகள் உண்டு நம்மாழ்வாரின் பாசுரங்களைச் சேவித்தவாறே உறங்கினர்.

மகாபிரசாதத்தை உண்டதன் பலனாக இத்தம்பதியருக்கு சுபக்ருத வருஷம் வைகாசி மாதம் அநுஷ நட்சத்திரத்தில் ஒரே சமயத்தில் இரண்டு ஆண் மக்கள் தோன்றினர். இதனைக் கேள்வியுற்ற இராமாநுசர் கோவிந்தரை அனுப்பி அக்குழந்தைகள் இருவருக்கும் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்வித்தார்.

மூத்த குழந்தைக்குப் பராசர பட்டர் என்றும், அடுத்த குழந்தைக்கு ஸ்ரீராமர் என்றும பெயர் வைத்தார். கோவிந்தரின் தம்பி பாலகோவிந்தருக்கும் ஆண்மகவு ஒன்று பிறந்தது. அம்மகவுக்குப் பராங்குச பூரணம் என்று பெயர் சூட்டினார்.

ஆளவந்தாரின் திருவுள்ளக்குறையாக இருந்துவந்த மூன்றுவதும் இராமாநுசர் பூர்த்தி செய்தார்.

1) பிரும்ம சூத்திரத்திற்கு விசிஷ்டாத்வைத சமய சம்பந்தமாக ஸ்ரீபாஷ்யம் அவதரிக்க வேண்டுமென்ற விருப்பமும், 2) நம்மாழ்வாருடைய திருவாய்மொழிக்கு ஒப்பற்ற வியாக்யானம் அவதரிக்க வேண்டும் என்னும் விருப்பமும், 3) வியாச பராசரர்கள் பெயரை மறவாமல் நன்றி பாராட்டும் முகமாக அவர்கள் திருப்பெயரை நினைக்க வேண்டும் என்னும் விருப்பமும் நிறைவேறத் தாம் செய்த உறுதியை இவ்வாறு இராமாநுசர் நிறைவு செய்தார்.

பராசரர் தம் இளமைப் பருவத்திலேயே அதிமேதாவியாக விளங்கிக் கற்றவரும் மற்றவரும் களிக்கும்வகையில் காணப்பட்டார். உபநயனம் முடித்து

உபநிடதத்தைக் கோவிந்தரிடம் பயின்றார். அப்போது "அணுவினும் பரம அணுவாகவும், பெரிதினும் மிகப் பெரிதாகவும் காட்சி தருபவன் இறைவன்" என்று பகவானுடைய குணநுபவத்தைக் கோவிந்தர் பராசரருக்கு உபதேசித்தார்.

இதுகேட்ட பராசரர் கோவிந்தரிடம், "ஒரே பொருளில் முரணபட்ட இருவிதமான தத்துவங்கள் எவ்வாறு இருக்கக்கூடும்?" என்று வினவினார். இதுகேட்டுக் கோவிந்தர் வியப்படைந்தார்.

திருவரங்கப்பெருமானின் மகாபிரசாதத்தை உண்டதனாலேயே இத்தகு புத்திரர்கள் வாய்த்தனர் என்று கூரேசர் மகிழ்ந்தார்.

## நலம் தருவது நற்பண்பே!

வழக்கம்போலவே அன்றும் திருவரங்கத்தில் பெரிய திருவிழா! வேதவிற்பன்னர்கள் வேத கோஷமிசைத்துக்கொண்டிருக்கின்றனர். நாலாயிர திவ்யப் பிரபந்தத்தை நாவன்மை மிக்க நல்லோர் பக்தியுடன் பண்ணோடு பாடிக்கொண்டிருந்தனர். நாராயண நாம சங்கீர்த்தனம் செவிக்குத் தேனாக வந்து விழுந்து கொண்டிருந்தது. எழுந்தருளியிருந்த பக்தர்களின் உள்ளம் ஆனந்த பரவசத்தால் மூழ்கியிருந்தது.

அப்போது, திருவரங்கப் பெருமான் தேவியாருடன் கருட வாகனத்தில் அமர்ந்து காண்பவர் கண்ணுக்கும் கருத்துக்கும் முத்தியின்பம் நல்கும் பொருட்டு எழுந்தருளினார். தூபதீப நைவேத்தியங்களால் பெருமாளைப் பக்தர்கள் வழிபட்டுக் கொண்டிருந்தனர். வாயாரப் பாடியும், மனமாரத்துதித்தும் நின்ற அடியார்களுக்குத் தீர்த்தம் சடாரி சாதிக்கப்பட்டுப் பிரசாதமும் அளிக்கப்பெற்றது.

பக்தி உணர்ச்சி பெருக்கெடுத்தோடும் இக்கூட்டத்தின் இடையே இதற்கு மாறான நிகழ்ச்சியொன்றும் நடைபெற்றுக்கொண்டிருந்தது.

கட்டிளங்காளை ஒருவன் கவின்மிக்க கன்னியொருத்தியைக் கைத்தாங்கலாகப் பிடித்துக் கொண்டிருந்தான். வெயில் அவள்மீது படாதவாறு குடை பிடித்துக்கொண்டிருந்தான். வெயிலின் கொடுமையால் வெளிப்படும் வேர்வையைத் துடைத்தும், விசி

றிகொண்டு விசிறியும் அவளை உபசரித்துக் கொண்டிருந்தான்.

பக்தி ஆரவாரம்மிக்க இக்கூட்டத்திடையே அவன் தன்னைச் சுற்றியிருப்பவர்களைப் பற்றிக் கவலைப்படவில்லை. தேனுண்ணும் வண்டுபோல அவளின் பத்தில் அவன் தன்னையே மறந்து போயிருந்தான். எனவே, அவனிடம் கூச்சமோ அச்சமோ ஏதும் காணப்படவில்லை. இவர்கள் நிலையைக் கண்டவர்கள் தாம் தம் முகத்தைத் திருப்பிக் கொண்டு செல்லலானார்கள்.

அப்போது, காவிரியில் நீராடிவிட்டு ஸ்ரீமுதலியாண்டான் கைத்தாங்கலோடு சீடர்கள் புடைசூழ இராமாநுசர் அவ்வழியாக வந்து கொண்டிருந்தார். வந்தவர் அக் காமுகனைக் கண்டார். அவனை அழைத்து வருமாறு சீடர்களை அனுப்பினார்.

கன்னியின் கனியிதழில் மெய் மறந்திருந்த அவன் அருகில் சீடர்கள் சென்று நின்றனர். சென்றவர்கள் பலமுறை உரக்கக் கூப்பிட்ட பின்னரே அவன் தன் சுயநினைவுக்கு மீண்டான்!

அவன் பெயர் தனுர்த்தாசன் என்பது!

சுயநிலை பெற்ற தனுர்த்தாசன் வந்தவர்களைக் கண்டு திடுக்குற்றான். வந்த செய்தி என்னவென்று கேட்டான்! இராமாநுசர் அவனை அழைத்து வருமாறு விடுத்த ஆணையைக் கூறினர். எனவே, தன் மனைவியையும் அழைத்துக் கொண்டு தனுர்த்தாசன் விரைந்து சென்று இராமாநுசரைக் கண்டு அவர்தம் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். கைகட்டி வாய் புதைத்து அடக்கத்துடன் ஒரு ஓரமாக நின்றான்.

இராமாநுசர் தனுர்த்தாசனைப் பார்த்துக் கேட்கலானார்: "அவளுக்குத்தான் அச்சம், மடம், பயிர்ப்பு, நாணம் எனும் பெண்மைக் குணங்கள் இல்லை! உனக்குமா கூச்சம், வெட்கம் என்பது சிறிதும் இல்லாமல்போய்விட்டது. உன்னைப் பலரும் பார்த்துப் பரிகசிக்கின்றதைப் பார்க்கவில்லையா? நீ என்ன அமுதத்தை அவளிடத்தில் பருகிக் கொண்டிருக்கிறாயா?"

இராமாநுசரின் கேள்விகளால் தனுர்த்தாசனின் மனத்தில் எத்தகைய சஞ்சலமும் ஏற்படவில்லை. தனுர்த்தாசன் கூறலானான்.

"பெரியீர்! இவளுடைய கண்களைவிட அழகான பொருள் ஒன்று உலகத்தில் இருப்பதாக எனக்குப் புலப்படவில்லை. இவள் கண்களைக் கண்டுவிட்டால் எனக்குச் சித்தமே கலங்கிவிடுகிறது. நான் என்னையே மறந்துவிடுகிறேன்! என்னசெய்வது?" என்று தனுர்த்தாசன் கூறினான்.

இதுகேட்டு இராமாநுசர் "அப்பா நீ எந்த ஊர்? உன் பெயர் என்ன?" என்று வினவினார்.

"ஐயனே! என் பெயர் தனுர்த்தாசன் என்பது. நான் நிசுளா நகரைச் சேர்நதவன். மற்போர் புரிவதில் வல்லவன். இவள் என்மனைவி. பெயர் ஹேமாமாள் என்பது!" என்று தனுர்த்தாசன் கூறிய பதிலைக் கேட்டு இராமாநுசர் கூறலானார்.

"உன் மனைவியின் கண்களைக் காட்டிலும் அழகான கண்களைக் கொண்டவரைக் காட்டுகிறேன். இன்று மாலை எம் இருப்பிடத்துக்கு வாரும்! மூவுலகங்களிலும் காணக்கிடைக்காத மோகனக் கண்களை நீர் காணலாம்!" என்று இராமாநுசர் கூறினார். அவ்வண்ணமே வருவதாகத் தனுர்த்தாசன் கூறினான்.

மாலைப்பொழுதும் வந்தது! இராமாநுசரின் இருப்பிடம் தேடித் தனுர்த்தாசன் சென்றான். தனுர்த்தாசனை அழைத்துக்கொண்டு இராமாநுசர் திருவரங்கப் பெருமான் சந்நிதிக்குச் சென்றார். இராமாநுசரின் வருகை கண்ட அர்ச்சகர்கள் தக்க உபசாரம் செய்தனர். பெருமாளுக்கு கற்பூர ஆரத்தி காட்டினர்.

கருப்பூர ஒளியில் கருமாணிக்கமாகக் காட்சி தந்துகொண்டிருக்கும் திருவரங்கனின் செந்தாமரைக் கண்கள் பேரொளி வீசின. கருணை பொழியும் கண்களின் கவின்மிகு காந்த சக்தியில் தனுர்த்தாசன் தன் மனத்தைப் பறிகொடுத்தான். "அரங்கனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணுவே!" என்னுமாறு தனுர்த்தாசன் வைத்த கண் வாங்காமல் தன்னையே மறந்திருந்தான். அவன் விழிகளில் ஆனந்தக் கண்ணீர் வழிந்தோடியது.

சற்றுநேரம் கழித்துத் தன் சுயநினைவுக்கு வந்த தனுர்தாசன் தன் அருகில் நின்று கொண்டிருந்த இராமாநுசரின் திருவடிகளைப் பற்றிக் கொண்டான். அவரது பெருங்கருணையால் தனக்குக் கிடைத்த பெரும் பேறு குறித்து நன்றியுடன் நாத்தழுதழுக்கக் கூறினான்.

தமது திருவடிகளில் வீழ்ந்து கிடந்த தனுர்த்தாசனை இராமா

நுசர் தூக்கி எடுத்து நிறுத்தினார். திருவரங்கப்பெருமானின் அருளொழுகும் திருக் கண்களைக் கண்டு கடைத்தேறும் கதிக்கு ஆளாக்கிய இராமாநுசரின் பெருங்கருணையைத் தனுர்த்தாசன் வியந்தான். தன் கணவன் பெற்ற பேரின்பத்தைக் கண்டு ஹேமாம்பாளும் எல்லையிலா மகிழ்ச்சி கொண்டாள்.

காம இருளில் மூழ்கிக்கிடந்த தனுர்த்தாசனும், ஹேமாம்பாளும் கடைத்தேற ஞான ஒளி காட்டிய இராமாநுசரின் கருணைத் திறத்தை அனைவரும் வியந்தனர்.

ஞான ஒளி பெற்ற தனுர்த்தாசன் இதுமுதலாகத் தனுர்த்தாசர் என்று சிறப்புடன் அழைக்கப்பெற்றார். நிசுளாபுரியை விட்டு நீங்கிய தனுர்த்தாசர் தம் துணைவியுடன் திருவரங்கத்திலேயே வாழத்தொடங்கினார்.

தனுர்த்தாசரின் குருபக்தி. பணிவு, இன்சொல், கள்ளங்கபடமற்ற உள்ளம், மன உறுதி இவற்றையெல்லாம் கண்டு இராமாநுசர் பெரிதும் மகிழ்ந்தார். காவிரியாற்றுக்கு நீராடச் செல்லும் போது முதலியாண்டானின் கையைத் தாங்கலாகப் பிடித்துச்செல்லும் இராமாநுசர் நீராடித்திரும்பும்போது தனுர்த்தாசரின் கையைப் பற்றிய வண்ணம் தம் மடத்தை அடைவதை வழக்கமாகக் கொண்டார்.

தனுர்த்தாசர் பால் இராமாநுசர் வைத்திருந்த அளவற்ற மதிப்பினைக் கண்டு மற்ற சீடர்கள் பொறாமை கொள்ளலாயினர். இதனை அறிந்தும் இராமாநுசர் அமைதியாகவே இருந்தார்.

சீடர்கள் அனைவரும் உறங்கிய பின்னர், ஒருநாள் தம் மடத்திலிருந்து சீடர்களின் கௌபீனங்களையெல்லாம் இராமாநுசர் துண்டு துண்டாகக் கிழித்தெறிந்தார். பொழுது விடிந்ததும் சீடர்கள் தங்களுக்குள் ஒருவருக்கொருவரைத் தரக்குறைவாகத் தாக்கிப் பேசிக்கொண்டனர். சீடர்களின் மனப்பக்குவமற்ற நிலையை உணர்த்த நடத்திய நாடகமே இது!

(தொடரும்)

## பாதுகையின் சிறப்பு

**வை**குண்டத்தில் ஒரு முறை ஆதிசேஷனுக்கும், பகவானின் பாதுகைக்கும் போட்டி எழுந்தது.

ஆதிசேஷன் சொன்னது: பகவானை எப்பொழுதும் குடையாக இருந்து காத்து வருகிறேன் எனக்குத்தான் சிறப்பு அதிகம் என்றது. இதைக் கேட்ட பாதுகை பகவானிடம் தனக்கு சிறப்பு இல்லையேஎன வருந்தி வேண்டியது. அதற்கு பகவான் ஸ்ரீமந் நாராயணன் உனக்கும் சிறப்பு தருவேன் என பாதுகைக்கு வரம் அளித்தார்.

ஸ்ரீராம அவதாரத்தில் ஸ்ரீராமன் வனவாசம் சென்ற பொழுது பரதன் அண்ணனின் பாதுகையை தலையில் சுமந்தது. அயோத்தியின் சிம்மாசனத்தில் இராமனுக்கு பதில் ஆட்சி புரிந்ததும் இராமனின் பாதுகையே, ஸ்ரீமந் நாராயணன் கொடுத்த வாக்கை காப்பாற்றி, பாதுகைக்கு சிறப்பு அளித்தார்.

## விபூதியின் மகிமை

**வி**பூதி - பசுவின் சாணத்தை அக்கினியினாலே சுடுதலால் உண்டாகிய திருநீறு. இந்த விபூதியை பட்டு பையில் அல்லது பூஜையில் வைத்து தரித்தல் வேண்டும். விபூதியை வடக்கு அல்லது கிழக்கு முகமாக இருந்து தரித்தல் வேண்டும். விபூதியை பூசிக்கொள்ள வேண்டிய நேரம் நித்திரை செய்யப் போகும் பொழுது, காலை எழுந்து குளித்தவுடன் பூச வேண்டும். உணவுக்கு முன்னும் விபூதியை பூச வேண்டும்.

பார்சன் செ. ரமேஸ் - மதுரை.

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் தங்குவசதி விவரங்கள்

### ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி மைய பரப்பு

| விடுதி மற்றும் குடில்கள் பெயர்கள் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| ஆம்ப்ரோ விருந்தினர் விடுதி | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் இரண்டு ... | 1000-00 |
| (ஆ) சிறிய அறைத்தொகுதி-ஒன்று ... | 500-00 |
| பால குடீரம் | |
| (6 அறைத்தொகுதிகள்) ஒன்று ... | 500-00 |
| கோதாவரி சதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| கும்ப்ளே விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| கோகுலம் விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| எச்.ஆர்.ஜி. | |
| (ஏ மற்றும் பி பகுதிகள்) ... | 400-00 |
| ஹரிசதன் விருந்தினர் விடுதி | |
| (குளிர்சாதன வசதிகொண்டது) | |
| (அறைத்தொகுதி(1 to 7) ஒவ்வொன்றும்).. | 1000-00 |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள்... | 100-00 |
| (பெரிய அறைத்தொகுதிகள்) | |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள் (சிறிய... அறைத்தொகுதிகள்) | 50-00 |
| ஹில் வ்யூ சொகுசு குடில்கள் ... | 100-00 |
| இந்திரா விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 500-00 |
| ஜகன்னாத பவன் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| மோடி பவன் | |
| (8 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி குடில்கள் | |
| (17 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 400-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி | |
| (பிரதானமானது) | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் இரண்டு ... | 1500-00 |
| (ஆ) மற்றைய 7 அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் ... | 1500-00 |
| ஸ்ரீ லக்ஷ்மி நிலையம் | |
| (3 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| ஸ்ரீ நிகேதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| ஸ்ரீ நிவாசா நிலையம் | |
| (5 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| சாந்தி சதன் | |
| (7 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| சிறப்பமைப்பு குடில்கள் ... | 400-00 |
| எஸ்.வி. விருந்தினர் விடுதி ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| ஸ்ரீவாரி குடீர் விருந்தினர் விடுதி ... | 2000-00 |
| (குளிர்சாதன வசதி கொண்டது) | |
| (அறைத்தொகுதி ஒன்று முதல் 4 வரை முழு விருந்தினர் விடுதியும்) | |
| சுராபுரம் தோட்டம் குடில்கள் | 250-00 |
| சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ... | 100-00 |
| வித்யாசதன் பெரிய அறைத் | |
| தொகுதி (ஒன்று) ... | 1500-00 |
| (அ) மற்றைய அறைத்தொகுதிகள் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| வராஹசுவாமி விருந்தினர் விடுதி ... | 100-00 |

### டி.பி. குடில்கள்

| | |
|---|---|
| (2 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 150-00 |
| தனி அறை ... | 30-00 |
| வெளிப்புற குடில்கள் ... | 75-00 |
| டி.பி.சி.யில் சிறப்பமைப்பு குடில்கள் | |
| (அ) குடில் எண்கள்61 A, B (குடில்களுக்கு உள்ளே) ... | 400-00 |
| (ஆ) 57, 58, 60 A, B ... | 400-00 |
| (இ) 62A, B; 64Q, A, B; 65, A, B; 66, 67 69 A,B ... | 400-00 |
| மங்களகிணறு குடில்கள்(எம்.பி.சி.) ... | 75-00 |
| (அ) (2 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் ... | 150-00 |
| முழு குடில் எண். 31, A,B; 31 C,D; ... | 150-00 |
| வேலி வ்யூ குடில் (வி.வி.சி.) ... | 75-00 |
| (3 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் 44 AB; 47 AB; 50 AB ... | 150-00 |
| ஆழ்வார் ஏரி குடில்கள் (ஏ.டி.சி.) ... | 50-00 |
| ஏ.டி.சி. தனியறை (ஒவ்வொன்றும்) ... | 30-00 |
| அஞ்ஜனாத்ரி நகர் குடில்(ஏ.என்.சி.) ... | 15-00 |
| கருடாத்ரி நகர் குடில்(ஜி.என்.சி.) ... | 15-00 |
| சங்குமிட்டா குடில்கள்(எஸ்.எம்.சி.) ... | 15-00 |
| சேஷாத்ரிநகர் குடில்கள்(எஸ்.என்.சி.) ... | 15-00 |
| ஹில்வ்யூ குடில்கள் | |
| (சாதாரணமானவை) ... | 15-00 |

(திருமலையில் தங்குவசதி கோரும் யாத்திரிகர்கள் ரூ. 100/-ஐ "Assistant Executive Officer, (Reception I) T.T.D., Tirumala" எனும் பெயரில் ஒரு வங்கி காசோலை மூலமாக, தங்கும் தேதி பற்றிய ஆங்கிலத்தில் எழுதப் பட்ட விவரங்களுடன்; மேற்குறிப்பிட்ட முகவரிக்கு, 30 நாட்களுக்கு முன்பேயே அனுப்புதல் வேண்டும்.)

# அருள்மிகு திருவேங்கடம் உடையான் திருக்கோயில் - அரியக்குடி

திரு. சாலெ.நா.சா. நாராயணன் - காரைக்குடி

### அமைவு இடம் :

சிவகங்கை மாவட்டம், காரைக்குடி இருப்புப்பாதை நிலையத்திலிருந்து தெற்கே இரண்டு கிலோமீட்டர் தொலைவிலும் காரைக்குடி நகரிலிருந்து தென்கிழக்கே ஐந்து கிலோமீட்டர் தொலைவிலும் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. பிரம்மாண்டமான மதில் சுவர்களுடன் கூடிய இத்திருக்கோயில் 2 ஏக்கர் 30 செண்ட் நிலப்பரப்பில் அமைக்கப்பட்டுள்ளது. திருக்கோயிலுக்கு முன் பகுதியில் 1568 ச.அடி காலியிடம் சொந்தமாக உள்ளது.

இப்பகுதியில் உள்ள 18 நகரத்தார் திருக்கோயில்களில் விஷ்ணுவுக்கு என்று அமைந்த ஆலயம் இது ஒன்றே ஆகும். பிரபல சங்கீத வித்வான் அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் அவர்கள் பிறந்த ஊர் இது.

### பெயர் விளக்கம் :

ஹரிச்சேத்திரம் - அரியக்குடி - பெருமாள் என்றும் உறையும் இடம் என்னும் பொருள் விளங்க இது தமிழில் அரியக்குடி என்றும் சமஸ்கிருதத்தில் ஹரிச்சேத்திரம் என்று இந்த ஊருக்கு பெயர் வழங்கப்படுகிறது.

திருப்பதி பெருமாளுக்காக இத்திருக்கோயில் எழுப்பப்பட்டு உள்ளமையினால் திருவேங்கடம் உடையான் திருக்கோயில் என்றும் திருப்பதி செல்ல இயலாதவர் இக்கோயிலில் காணிக்கை செலுத்துவதால் தென்திருப்பதி என்றும் பெயர் வழங்கலாயிற்று.

பெருமாள் ஸ்ரீநிவாசன் அல்லது திருவேங்கடம் உடையான் என்றும் தாயார் பத்மாவதி அல்லது அலர்மேல்மங்கை என்றும் நாமம் சூட்டப்பட்டுள்ளது.

### தலபுராணம் :

இவ்வூரில் வாழ்ந்து வந்த திரு. சேவுகன் செட்டியார் என்னும் நகரத்தார் பெருமகன் பெரும் தன வணிகராக இருந்த போதிலும் ஈத்துவக்கும் இன்பமே பேரின்பம் என்று வாழ்ந்து வந்தார். ஆண்டவன் அருள்தான் செல்வங்களில் மிகச் சிறந்த செல்வம் எனக் கருதி ஆண்டவனது அருட்பணியில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்டார். இல்லறத்தில் இருந்தபடியே திருவேங்கட முடையானை எண்ணி கடுந்தவம் செய்யலானார். அவ்வாறு தவத்தில் ஆழ்ந்திருக்கும் வேளையில் பாம்புகள் அவர் மீது ஏறி விளையாடியது கண்டு பக்தர்கள் பெருகினர். பக்தர்கள் நேரில் வந்து சேவுகன் செட்டியார் அவர்களை தரிசித்து தீராத நோய்களை போக்கிக் கொண்டு திருவேங்கடம் உடையானுக்கு செலுத்தவேண்டிய காணிக்கைகளை உண்டியலில் செலுத்தினர். ஆண்டுதோறும் அந்த உண்டியலை எடுத்துக்கொண்டு திருப்பதிக்கு நடந்து சென்று காணிக்கைகளை திருவேங்கடமுடையானிடம் சமர்ப்பித்து வந்தார். மூப்பெய்திய காலத்தில் ஒருநாள் திரு. சேவுகன் செட்டியார் தலையில் காணிக்கை உண்டியலை சுமந்து திருப்பதி மலை ஏறிச் செல்லும் வழியில் மயக்கமடைந்து வீழ்ந்துவிடவே பக்தனின் பக்தியில் பரவசமடைந்த எம்பெருமான் தள்ளாத வயதில் இனிமேல் மலை ஏற வரவேண்டாம் என்றும் பக்தன் இருக்குமிடம் யான் வருகிறேனென்று அருள் செய்து அரியக்குடிக்கு செட்டியார் அவரக்ள் திரும்பும் பொழுது, என்னிடத்தில் நான்கு பக்கமும் மூளை அடித்து நடுவில் உடைந்த தேங்காயும், துளபமும், குங்குமமும் இருக்கின்றதோ அவ்விடத்தில் எம்பெருமானை வழிபட்டு காணிக்கைகளை செலுத்தி வந்தால் எல்லா நன்மைகளும் உண்டாகும் என பேரருள்

செய்து அன்றிலிருந்து அரியக்குடி என்றும் தென்திருப்பதி என்றும் எம்பெருமான் வசியும் திருத்தலமாயிற்று.

மேலும், சேவுகன் செட்டியார் அவர்களுக்கு கேட்ட அசரீரியின்படி அவரது முயற்சியால் ஸ்ரீரங்கம் பெரிய கோயிலில் இருந்து இராமானுஜரால் ஆராதனை செய்யப்பட்ட நம்பெருமானார் விக்கிரகம் பூக்குடலையில் கொண்டு வரப்பட்டது. திருப்பதியில் இருந்து சடாரியும் திருமயத்திலிருந்து அக்கினியும் கொண்டுவரப்பட்டு திருவேங்கடம் முடையான் திருக்கோயில் ஸ்தாபிக்கப்பட்டது. இதனால் தான் இத்தலத்தில் உள்ள பெருமானை தரிசித்தால் மேற்படி மூன்று தலங்களை தரிசித்த பலன் உண்டு என்பர்.

**மூர்த்தங்கள் :**

சிறிய இராஜகோபுரத்தை கடந்து உள்ளே சென்றவுடன் கொடிமரத்தினை அடுத்து பெருமானை நோக்கி வணங்கியவாறு நின்ற நிலையில் கருடாழ்வார் சன்னதி உள்ளது. மேற்படி சன்னதியில் வலதுபுறம் தெற்கு நோக்கியவாறு முதலில் ராமர் சன்னதி உள்ளது. இதில் ராமர், லட்சுமணர், சீதை அனுமன் ஆகிய நால்வரும் உள்ளனர். ராமர் சந்நிதிக்கு மேற்கே தேசிகர் சந்நிதி உள்ளது. மேற்படி இரு சன்னிதிகளை கடந்து துவார பாலகரை வணங்கி உள்ளே சென்றுல் பெருமாள் சந்நிதி. மூலவர் திருநாமம் திருவேங்கடமுடையான் மேற்கு நோக்கி நின்ற நிலையில் இரு புறமும் ஸ்ரீதேவி பூதேவியுடன் காட்சி தருகிறுர். மேற்படி சந்நிதியைச் சுற்றி வலம் வந்து சுற்று முடியும் போது வடகிழக்கு மூலையில் சேனை நாயகர் சந்நிதி உள்ளது. பெருமான் சந்நிதியின் தென்புறம் தாயார் சந்நிதி. தாயார் திருநாமம் அலர்மேல்மங்கை கீழ்த்திருப்பதியில் உள்ள அலர்மேல் மங்கையே இங்கேயும் குடிகொண்டிருப்பதாக கூறுவர். தாயார் சந்நிதியை வலம் வர சிறு பிரகாரமும் உண்டு. பெருமாள் தாயார் இரு சன்னதிகளையும் வலம் வர உள் பிரகாரம் உண்டு. மகா மண்டபத்தின் வடகிழக்கு மூலையில் தெற்கு நோக்கி பள்ளியறையும் மேற்கு நோக்கி யாகசாலையும் அமைக்கப்பட்டுள்ளது. மகாமண்டபத்தில் தென்கிழக்கு மூலையில் மடப்பள்ளி அமைக்கப்பட்டுள்ளது. சிறிய இராஜ கோபுரத்தைக் கடந்து வெளியே வந்தால் மதில் சுவரின் உள்பகுதியில் வெளிப்பிரகாரம் உள்ளது. வெளிப்பிரகாரத்தின் வடபகுதியில் ஏகாதசி மண்டபமும் சொர்க்கவாசல் கதவும் உள்ளது. ஏகாதசி மண்டபத்தை அடுத்து கோயிலின் மேல்தளத்தில் ஈசான்ய மூலையை நோக்கி மூலகருடன் உள்ளது. இப்பகுதியில் வேண்டும் வரம் அளிக்கு மிகவும் பிரசித்தி வாய்ந்த தெய்வமாக மூலகருடன் உள்ளது.

**பிரார்த்தனை நிறைவேற்றும் அதிசய கருடாழ்வார் :**

எல்லாப் பெருமாள் கோவிலிலும் கருடாழ்வார் கிழக்குநோக்கி இருப்பார். பெருமாளை நோக்கியவாறு இருப்பார். மூலை கருடாழ்வார் கிழக்கு நோக்கி இருப்பார். ஆனால் அரியக்குடியில் ஈசான மூலையில் தனி கோபுரத்தில், வடகிழக்கு நோக்கி அமைந்த அதிசய கருடாழ்வார் மிக வரப்பிரசாதி. மாதாமாதம், சுவாதியன்று இவருக்குச் சிறப்புத் திருமஞ்சனமும் பூஜையும் நடைபெறுகிறது. எந்தப் பிரார்த்தனை செய்து கொண்டாலும், இங்கு இவரது சன்னதியில் கீழ் உள்ள சுவரில் தேங்காய் சிதறுகாய் உடைத்தால் காரியம் கைகூடுகிறது.

வைகாசியில் பிரம்மோத்ஸவம் எனப் பெறும் பெருந்திருவிழா நடைபெறுகிறது.

**தென்திருப்பதி திருவேங்கடவா திருவருள் புரிவாய்! :**

1. புத்திர பாக்கியம் இல்லாதவர்கள் இந்த அலர்மேல் மங்கைத் தாயார் திருமுன்பு தொட்டில் வளையல்கட்டி வைக்கின்றனர்.
2. வளைகாப்பு நடந்ததும் கூட இப்படி வளையலைத் தாயார் சன்னிதியில் கட்டுகின்றனர் நற்புத்திரப் பேறு கிடைக்கிறது.
3. 9 புதன்கிழமை தாயாரைத் தரிசித்து அர்ச்சனை செய்தால் தடைபெற்ற திருமணம், தடைமாறி, விரைவில் நடைபெறும்.
4. 48 நாள் திருவேங்கடவனுக்கு அர்ச்சனை செய்தால் சகல காரிய சித்தி கிடைக்கும்.
5. 12 சனிக்கிழமைகள் தொடர்ந்து வந்து அர்ச்சனை செய்தால் சகல தொல்லைகளும் நீங்கும்.

மதிப்புரை

# அறிஞர்கள் பார்வையில் கம்பன்

[தொகுப்பாசிரியர்: டாக்டர் ச.கி. ராமன்; வெளியீடு: கம்பன் கழகம், நியூ ராமா லாட்ஜ், 20, நெல்லுக்காரத்தெரு, காஞ்சிபுரம்-631002; பக்கங்கள்: 152; விலை: ரூ. 40-00.]

இராமகாதை ஓர் அழியாக் காப்பியம். சம்ஸ்கிருதத்தில் வால்மீகி இயற்றிய இராமாயணம், பல மொழிகளில் இராமாயணத்தைக்கூறும் இலக்கியங்கள் மலர வழிவகுத்திருக்கின்றது. வால்மீகியின் இராமாயணத்தினால் ஈர்க்கப்பெற்றுத் தமிழ் மொழியில் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த மாக்கவி கம்பன் அதை ஒரு முதல் நூலாகவே வடித்திருக்கின்றார். ஆங்காங்கே சிறிய, ஆனால், கருத்துப் பொதிந்த மாற்றங்களுடன் தமிழ்ப் பழக்கவழக்கங்களுக்கும் பண்பாட்டிற்கும் ஏற்பத் தமது காப்பியத்தை இயற்றியிருப்பது நோக்கற்பாலது. ஆனால், அவர் செய்துள்ள சிறு மாற்றங்கள் கூட காப்பியத்தின் சுவையினை மேம்படுத்துவதாக அமைந்துள்ளன என்பது அவரது பன்முகப் புலமையின் விரிவினுக்கும் இலக்கியப் பார்வையின் நயத்திற்கும் சான்றாக அமைந்துள்ளது. வால்மீகியின் இராமாயணம் அமைதியாகச் செல்லும் ஓர் ஆறு போன்றது என்றால், கம்பனின் காப்பியம் மலை முகடுகளினூடே பல்வண்ணம் காட்டிக் குறித்தோடி ஆடிவரும் ஓர் அருவியினைப் போன்றதாகும். இவ் வண்ணங்களை அறிஞர்கள் திறனாய்வு நோக்கில் இரசனையுடன் காணும் பார்வை பலதிறப்பட்டதாகும்.

அத்தகைய இருபது அறிஞர்களின ஆய்வுக் கட்டுரைகள் இந் நூலினை அணிசெய்கின்றன. இவற்றுள் மூன்று ஆங்கிலத்திலும், எஞ்சியுள்ள தமிழ்ப் பதினேழில் பதினான்கு உரைநடையிலும் மூன்று கவிதைகளாகவும் மலர்ந்துள்ளன. கட்டுரை ஆசிரியர்கள் பலரும் கற்றுத்துறைபோன, ஆழ்ந்த புலமை சார்ந்த அறிஞர் பெருமக்கள். எனவே, அவர்கள் தத்தம் கருத்துக்களைத் தக்க சான்றுகளுடன் விளக்கியிருப்பதில் வியப்பு ஏதும் இல்லை. இந்நூல் தமிழிலக்கியத்தில் ஒரு புதிய போக்கினைக் காண்பிப்பதாக அமைந்திருப்பதால் இது தமிழ் வளர்ச்சியில் ஆர்வமும் அக்கரையும் கொண்டிருப்போரால் வரவேற்கத் தக்கதாகும்.

'வால்மீகியும் வள்ளுவரும்' கட்டுரையில் காணப்படும் 'அறநெறியில் வளர்வதே இன்பம்' என்னும் குறளின் கருத்து வால்மீகியின் இராமனின் கருத்தை ஒத்தது என்னும் விவரம், 'கம்பன் கண்ட இராமன் யார்?' கட்டுரையில் கூறப்படும் 'ஐந்தொழிலையும் செய்பவன் இராமன் என்பதைத் தெளிய வைப்பதாலும் வேத முதற்காரணன் என்று இறுதியில் சொல்வதாலும் கம்பன் கண்ட இராமன் மூலப் பொருளே யாவான்' என்பது, 'கம்பர் தனி நாகரிகர்' கட்டுரையில் தென்படும் 'சற்றுச் சங்கடமான செய்தியினையும் கூடத் தொடர்புள்ளவருக்கு மனவருத்தம் எதுவும் ஏற்படாதவாறு நாகரிகமாகச் சொல்வது கம்பனின் கவித்திறன்' எனச் சொல்லியிருப்பது, 'கம்ப இராமாயணத்தின் மையப்பொருள்' கட்டுரையில் எடுத்துக் காட்டப்படும் 'அடைக்கல நெறியின் சிறப்பை உலகுக்கு எடுத்துரைப்பதே கம்ப ராமாயணத்தின் நோக்கு என்னும் விளக்கம், 'மிதிலையில் ஒருநாள்' கட்டுரையில் 'ஆண் எழிலும் பெண்ணழகும் இணைந்தவகை நயம் பட எடுத்துரைக்கப்பட்டிருப்பது, 'சிறியன சிந்தியாதான்' கட்டுரையில் சொல்லப்படும் 'தான் செய்த தவறுகளை உணர்ந்து மன்னிப்புக் கேட்பதும் பிறர செய்த தீமைகளைச் சிந்தை செய்யாதிருப்பதுவும் தெய்வப் பண்புகள்' என்னும் கருத்து, 'அண்ணலும் அவளும்' கட்டுரையில் சுட்டிக் காட்டப்படும். 'அண்ணலாம் இராமபிரானாகிய யோகசக்தி, சீதாப்பிராட்டியாகிய போக சக்தியோடு ஒருங்கிணைந்து, இராவணவதத்தை மட்டும் நிகழ்த்தி நிறுத்திவிடாது, நன்மாந்தரின் வாழ்க்கை நெறியாகவும் நிலவுலகத்தில் விளங்கச் செய்தது' என்னும் விவரம், 'வாங்கரும் பாதம் வகுத்த வான்மீகி' கட்டுரையில் தெரிவிக்கப்படும் 'பழமையின் பண்பு கெடாத புதுமையின் வாழ்வு

அமைய வழிகாண இளைய தலைமுறை துணியவேண்டும்' என்னும் விளக்கம் ஆகியனவும் ஏனைய அத்தகைய கருத்துக ளும் சிந்தனையைத் தூண்டுவ னவாய் உள்ளன. 'Kamban's Gentle Giant' கட்டுரையில் கும் பகர்ணனை ஓர் அவலச்சுவை நாயகனாக எடுத்துக்காட்டுகை யில் Misfortunes can never befall those who are devoted to righteousness என கும்பகர்ணன் விபீஷணனிடம் கூறுவது இர சிக்கத் தக்கதோடுகூட, மனதில் வைத்துக்கொள்ளக் கூடியதுமா கும். கும்பகர்ணனின் உள்ளத்தி னைச் சரியாகப் புரிந்துகொள் ளவும் அது உதவும்.

'Kamban, a National Integreator' என்னும் கட்டுரை யில் காணப்படும் 'The reason for the writing of the puranam (Sekkizhar's Peria Puranam) could be surmised to counter the influence of Vaishnavam which was taking deeper roots in the Tamil Country' என் னும் கருத்து, மரபு வழி யாகக் கிடைத்திருக்கும் செய் திக்குச் சற்று மாறுபட்டதாக இருக்குமோஎனத் தோன்றுகி றது. சோழ மன்னன், சிற் றின்பத்தைப் பற்றி அதிகமாக விவரிக்கும் 'சீவக சிந்தாமணி' போன்ற கவர்ச்சி இலக்கியங் களை விரும்பிப் படித்து வந் ததைக் கவனித்த அமைச்சர் சேக்கிழார், உயரிய மதிப் புகளை விளக்கும் சிவகதைக ளைப் பற்றி அரசனிடம் எடுத் துக்கூறி அவற்றை படிக்கு மாறு அறிவுறுத்தியபோது, அர சன் அக்கதைகளை விவரிக் கும் புராணத்தை இயற்றித் தருமாறு சேக்கிழாரை வேண் டினான் என்பதும் அதற்குத் தேவையான வசதிகளையும் செய்து கொடுத்தான் என்ப தும், 'பெரிய புராணம்' இயற்றி முடித்ததும் அரசனே முன் நின்று அதனை வெளியிட்ட தோடு, சேக்கிழாருக்கு 'தொண் டர் சீர் பரவுவார்' என்னும் விருதினை வழங்கிப் பெருமைப் படுத்தினான் என்பதும் வழிவ ழியாக வந்த விவரங்களாகும். 'பெரிய புராண'த்தின் தோற்றம் பற்றிய உண்மை அறிஞர் பெரு மக்களின் ஆய்வுக்குரியதாகும்.

'கம்பன் கவியில் கற்புக்கனலி' கவிதையில்

'அறிய அறிய அறியாமை
வெளிப்படும்
அறிந்திடாத சுகமெலாம்
புலப்படும்',
'சானகிதேவி கனலில் குளித்தாள்
கற்புத்தீயால் அக்கினி துடித்தான்',

'கம்பனின் இயற்கை' கவிதை யில்

'இயற்கையை இறையாய்
எண்ணி
ஏத்துவார் எங்கும் உண்டு',

''மானுட வேர்கள்' கவிதையில்

'வளம் மிகுந்த இராமகாதை
வையத்தோரின்
வாழ்வினிலே இன்பமுடன்
வளம் நிறைக்கும்!'
'மண்ணெலாம் செழிக்கவேண்டும்'
மானுடம் தழைக்க வேண்டும்'
'பண்ணெலாம் மனித நேயம்
பரவசம் பரவ வேண்டும்'

என்பன போன்ற வரிகள் மீண் டும் மீண்டும் சுவைத்துமகிழத் தக்கன.

நூலின் அச்சமைப்பும் கட்ட மைப்பும் அழகுற அமைந்துள் ளன. விலைதான் சற்றுக் கூடு தலோ எனச் சில வாசகர்கள் கருதக்கூடும்.

அ. நடராஜன்
திருப்பதி.



## ஆனி - ஆடியில்
## ஆழ்வார்-ஆசார்யர்கள் அவதாரநன்னாட்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | மாறனேரி நம்பி | ஆயில்யம் | 27-6-98 |
| 2. * | பெரியாழ்வார் | ஸ்வாதி | 4-7-98 |
| 3. | வடக்குத்திருவீதிப்பிள்ளை | ஸ்வாதி | 4-7-98 |
| 4. | வாதிகேசரி அழகியமணவாளச்சீயர் | ஸ்வாதி | 4-7-98 |
| 5. * | நாதமுனிகள் | அனுஷம் | 6-7-98 |
| 6. * | சக்கரத்தாழ்வார் | பூசம் | 24-7-98 |
| 7. * | பிரதிவாதி பயங்கரம் அண்ணன் | பூசம் | 24-7-98 |
| 8. * | ஆண்டாள் | பூரம் | 27-7-98 |
| 9. | கந்தாடை தோழப்பர் | பூரம் | 27-7-98 |
| 10. * | ஆளவந்தார் | உத்திராடம் | 7-8-98 |
| 11. | புண்டரீகாக்ஷர் | உத்திராடம் | 7-8-98 |
| 12. | தெற்காழ்வார் | திருவோணம் | 8-8-98 |

* திருமலை திருப்பதி தேவஸ்தானத்தில் கொண்டாடும் நட்சத்திரங்கள்

Published on behalf of T.T.Devasthanams by N.S. Ramamurthy, M.A., Editor and
Printed at T.T.D, Press by M. Lakshman Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507



# ஸ்ரீ வேங்கடேஸ்வரா
# வன மேம்பாட்டுத் திட்டங்கள்

மனித மனம் என்றென்றும் மகிழ்ச்சியும், அதிசயமும் கொள்ளும் வகையில் காடுகள் ஆண்டாண்டு காலமாக விளங்கிவருகின்றன. இயற்கையின் ஆற்றலுக்கும் அழகுக்கும் என்றென்றும் புதுப்பொலிவும், புதுப்பொருளும் அளித்து வருவன காடுகளாகும்.

இத்தகு விலைமதிப்பற்ற இயற்கை வளத்தை புனிதமிகு திருமலையில் பாதுகாத்திடும் வகையில் 1981ஆம் ஆண்டு 'காடு வளர்ப்புத் திட்டம்' ஒன்றினை பெருமளவில் பெருமுயற்சியுடன் ஒரு புனித வேள்வியாக மேற்கொண்டு பல்வேறு இனங்களைச் சேர்ந்த சுமார் 25 லட்சம் மரங்களை திருப்பதி மற்றும் திருமலையில் வளர்க்கும் பணியில் தி.தி. தேவஸ்தானம் ஈடுபட்டது. இதன் மூலமாக திருமலை மலைச்சரிவுகள், திருப்பதி நகரம் ஆகிய பகுதிகள் யாவும் பசுமையான 'வனச் செல்வத்துடன்' விளங்கிடவேண்டும் என்பதே திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் பெருவிருப்பமாகும்

துவக்கப்பட்ட திட்டத்தின் பெருவெற்றியின் தூண்டுதலினால் தற்போது திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல்வேறு திட்டங்களைப் புகுத்தியுள்ளது. அதுதான் "ஸ்ரீவேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத்திட்டம்". இத்திட்டத்தினால், திருமலை திருபப்தி தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள இப்புது முயற்சிகளில் யாத்திரிகப் பொதுமக்களும் பங்கேற்கும் வகையில் வழிமுறைகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், இத்திட்டத்திற்கு நன்கொடை வழங்கும் பக்தர்களுக்கு பலவிதமான நன்மைகளும் செய்யப்பட்டுள்ளன. இந்த 'வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டத்தின்' முக்கிய விவரங்கள் பின்வருமாறு:-

### விருக்ஷ ஸம்வர்த்தனம்

நன்கொடை ரூ. 25,000

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் 500 செடிகள் திருமலை மற்றும் திருப்பதியில் நடப்படும். இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இம்மரங்கள், இச்செடிகள் அழைக்கப்படும். இச்செடிகள் ஐந்தாண்டுகளுக்கு பராமரிக்கப்படும்.

### விருக்ஷ பிரஸாதம்

நன்கொடை : ரூ. 15,000

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் பயன்தரக்கூடிய 100 பழ அல்லது மலர் விதைகள் நன்கொடையாளர் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் 10 ஆண்டுகளுக்கு விநியோகிக்கப்படும்.

### ஸ்மாரக வனாறு (நினைவு மரங்கள்)

நன்கொடை : ரூ. 5,000

இத்திட்டத்தின் கீழ் திருமலை-திருப்பதி மலைச்சரிவுகளில் உள்ள தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும். நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.

### வன சம்ரக்ஷண பாகஸ்வாம்யம்

நன்கொடை : ரூ. 2,000

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத்தப்படும். இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக்கப்படும்.

சலுகை மாற்றங்களுடன் கூடிய இப்புதிய ஸ்ரீவேங்கடேஸ்வரா வன மேம்பாட்டுத் திட்டம் 1-2-96 முதற்கொண்டு செயல்படும். 31-1-96 தேதிக்கு முன்பு வரை இத்திட்டத்திற்கென நன்கொடை வழங்கிய பக்தர்கள், இத்திட்டத்திற்கென முன்பு அளிக்கப்பட்ட சலுகைகளைப் பெறுவர். நன்கொடை அளிக்கப்படும் மேற்படி தொகைகளுக்கு பிரிவு 35 CCB-இன் கீழ் 100 சதவிகிதம் வருமானவரி விலக்கு உண்டு.

கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517501.

